KALKI 12.7.92 ரூ. 3.00
பொன்விழா ஆண்டு

# கல்கி

"உப்பு நீரே ஜலசா; என் உயிர் மூச்சே ஜலசா!"



- பிஎச்.டி. செய்யும் மீனவ இளைஞர்!

# 'தொழில் தொடங்க ஆசைப்பட்டு அவதிப்படுகிறேன்!'

ஜூன் 21 கல்கி இதழின் தலையங்கம் படித்தேன். தமிழகத்தில் தொழில் துவங்குவது குறித்து அப்பட்டமான உண்மையை விவரித்திருந்தீர்கள். புதிதாகத் தொழில் துவங்க ஆசைப்பட்டு அவதிப்பட்டுக் கொண்டு இருக்கும் என் நிலை மையையும் விவரிக்கிறேன்.

'தொழில் தொடங்க எல்லா வசதிகளுமே உண்டு! இடை யூறுகள் எதுவுமே இல்லை!' என்ற அரசின் விளம்பரத்தை நம்பி, வணிகவியலில் இளங்கலைப் பட்டமும், நிறுவனச் செயலரியலில் முதுகலைப் பட்டமும் பெற்றவுடன், சுய தொழில் துவங்கத் திட்டமிட்டுப் பட்டுக்கோட்டை ஆர். வி. நகர் என்ற எங்கள் பகுதியில் உள்ள சுமார் மூவாயிரம் குடும் பங்களுக்கு வசதியாக ஏறத்தாழ ஒரு லட்சம் ரூபாய் மதிப் பீட்டில் மாவு, அரிசி, கோதுமை, எண்ணெய் அரைவை ஆலை நிறுவ அனைத்து ஏற்பாடுகளும் செய்தேன். இடம் சொந்த இடம்.

மேற்கண்ட ஆலையை, மாவட்டத் தொழில் மையம், தஞ்சாவூரில் பதிவு செய்து, சிறு தொழில் பதிவுச் சான்றிதழ் பெற்றேன். அங்கிருந்து கட்டடம் மற்றும் இயந்திரங் களுக்குத் தேவையான சிறு தொழில் கடனும் பெற்றேன். (கடன் பெற அடமானம் கொடுக்க வேண்டிய இடம் என் தந்தையின் பெயரில் உள்ளதால் மேற்கூறிய அனைத்தையும் அவரது பெயரிலேயே செய்துள்ளேன்)

அரசுக் கடனைப் பயன்படுத்திக் கட்டடம் கட்டி, இயந்திரங்கள் பொருத்தி, ஆலை இயங்கத் தேவையான 20 எச். பி. மின்இணைப்பும் முன்னுரிமை அடிப்படையில் வழங்கப்பட்டு, ஆலை இயங்கத் தயார் நிலையில் உள்ளது.

இதற்கிடையில், ஆலை அமைந்துள்ள இடம், பல வருடங்களுக்கு முன்பு தயாரிக்கப்பட்ட நகர அமைப்பு வரைபடத்தில் (Master Plan) குடியிருப்புப் பகுதியில் அமைந்துள்ளதாகக் கூறி பட்டுக்கோட்டை நகராட்சி அனுமதி அளிக்க மறுத்து விட்டது. உடனே நான் இது குறித்து 12.3.92 அன்று தஞ்சாவூர் மாவட்ட ஆட்சியர் தலைமையில் நடந்த ஒருமுனைக் குழு (Single Window Agency) கூட்டத்தில் நேரடியாகக் கலந்து கொண்டு முறையிட்டேன். மாவட்ட ஆட்சியர், நகராட்சி மண்டல இயக்குநர், தஞ்சை மாவட்டச் சிறுதொழில் சங்கத் தலைவர், மாவட்டத் தொழில் மையப் பொது மேலாளர் உள்ளிட்ட அந்தக் குழு விவாதித்து, ஆலை அமைந்துள்ள இடத்தைத் தொழில் (அல்லது) வணிகப் பகுதியாக மாற்றம் செய்து ஆலை இயங்க அனுமதிக்கலாம் என்று முடிவு செய்து, அதற்காக நகர் மற்றும் ஊரமைப்பு இயக்குனர், சென்னை அவர்களுக்குப் பட்டுக் கோட்டை நகராட்சி வழியாக மேல்முறையீடு செய்யுமாறு கூறினார்கள்.

நானும் கடந்த 23.4.92 அன்று அனைத்து விவரங்களோடு பட்டுக்கோட்டை நகராட்சியில் மேல்முறையீட்டு விண்ணப்பத்தைச் சமர்ப்பித்து விட்டேன். பின்னர், சம்பந்தப்பட்ட நகராட்சி கட்டட ஆய்வர் (Building Inspector)

அனைத்து அம்சங்களையும் ஆராய்ந்து, அப் பகுதி மக்களின் நன்மையைக் கருதியாவது ஆலை இயங்க அனுமதிக்க நகராட்சியே சிபாரிசு செய்து மேல்முறையீட்டுக்கு அனுப்பலாம் என்று குறிப்பு எழுதி, ஆணையர் பார்வைக்கு அனுப்பியுள்ளார். அதற்குப் பின்னரும், ஆலை இயங்க அனுமதியோ, வேறு தகவலோ வராத நிலையில், மீண்டும் கடந்த 9.6.92 அன்று தஞ்சையில் நடந்த ஒருமுனைக் குழு கூட்டத்தில் மாவட்ட ஆட்சித் தலைவரிடம் நேரிடையாக முறையிட்டு உள்ளேன். மேலும், இது குறித்து பட்டுக்கோட்டை சட்டமன்ற உறுப்பினரிடமும் தெரிவித்ததோடு, மண்டல இயக்குநர் நகராட்சி நிர்வாகம், தஞ்சாவூர், நகர் மற்றும் ஊரமைப்பு இயக்குநர், சென்னை ஆகியோருக்குக் கடிதம் எழுதியும் இன்று வரை எந்தப் பலனும் இல்லை.

தமிழக அரசு பட்டுக் கோட்டையைத் தொழிற்துறையில் மிகவும் பின்தங்கிய மாவட்டம் என்று அறிவித்துப் பல சலுகைகளை அறிவித்துள்ளதோடு, மாவு அரவை போன்ற சிறு தொழில்களை தமிழக மாசுக் கட்டுப்பாட்டு வாரியம், மாசுக் கட்டுப்பாட்டுச் சட்டங்களில் இருந்தும் விலக்களித்துள்ளது. இருந்தும் எவரும் எதையும் கண்டுகொள்வதாகத் தெரியவில்லை.

அனைத்து வேலைகளும் முடிந்து இயங்கத் தயார் நிலையில் இருக்கும் ஆலை இயங்காததால், அரசிடம் வாங்கிய கடனைத் திருப்பி செலுத்த முடியாமல், மொத்தமாகக் கடன் வாங்கிச் செலவு செய்த பணத்தையும் திரும்பச் செலுத்த முடியாமல் உள்ளேன். மின் இணைப்பு கொடுக்கப்பட்டு விட்டதால், ஆலை இயங்காமலேயே, அறுபது நாட்களுக்கு ஒருமுறை ரூ. 500/- (குறைந்த கட்டணம்) மின் கட்டணத்தையும் மேலும் மேலும் கடன் வாங்கிச் செலுத்திக் கொண்டிருக்கிறேன். அரசின் வாக்குறுதியை நம்பி, வேலைக்குச் செல்ல முயற்சி செய்யாமல் சுயதொழில் துவங்க ஆசைப்பட்டு, இப்போது ஆப்பசைத்த குரங்காக விழி பிதுங்கி நிற்கிறேன்.

ஒரு மிகச் சிறிய தொழிலைத் துவங்கவே இவ்வளவு பாடுபட்டுக் கொண்டிருக்கும் என் நிலைதான் இன்றைய தொழில் துவங்குவோரின் நிலை.

– எம். ஜெய்சங்கர்,
பட்டுக்கோட்டை.

# ஜனாதிபதி தேர்தல்: எதிர்க்கட்சி வேட்பாளர்



ஜனாதிபதி தேர்தலுக்கு எதிர்க்கட்சிகளின் வேட்பாளராக நியமிக்கப்பட்டுள்ள பேராசிரியர் ஜியார்ஜ் கில்பர்ட் ஸ்வெல், நமக்கு லால்பகதூர் சாஸ்திரியைப் பலவிதங்களிலும் நினைவூட்டுகிறார். சாஸ்திரியைப் போலவே இவருக்கும் பள்ளிக்கூடம் போகப் பண வசதி இருக்கவில்லை. அஸ்ஸாம் கிராமம் ஒன்றில் பிறந்த இந்தக் கிறிஸ்துவர், சிரப்பூஞ்சியில் உயர் நிலைப் பள்ளியில் படிக்க உதவிய ராமகிருஷ்ணா மிஷன், பின்னர் கல்கத்தாவில் கல்லூரிப் படிப்புக்கும் பணம் கொடுத்தது. ''இருக்க இடம், உடுக்கத் துணி, படிக்கப் புத்தகங்கள் எல்லாம் தந்து, சம்பளமும் கட்டினார்கள்'' என்று நன்றியுடன் கூறும் ஸ்வெல்; எம். ஏ. பட்டதாரியானார்.

சாஸ்திரியைப் போலவே வாழ்க்கையில் உயர்நிலைக்கு வந்த பிறகும் அடக்கமாகவும் எளிமையாகவும் விளங்குகிறார் ஸ்வெல். தில்லியில் அவர் வீட்டுக்கு யாரும் போகலாம். வரவேற்று உபசரிப்பவர், நமக்காக நாற்காலி தேடி தாமே தூக்கி வந்து போடுவார். ஆடம்பர சோபா செட் போன்றவை கிடையாது.

''அரசியலில் நுழைந்தது எப்படி?'' என்று கேட்டால், ''அகில இந்திய மாணவர் பேரவையில் சேர்ந்து, அதன் மூலம் அரசியலிலும் கல்லூரி நாட்களிலேயே ஈடுபட்டேன்'' என்கிறார். அரசியல் என்பது அவருக்குக் கண்மூடித்தனமான ஒரு வழிப் பாதையல்ல. ராமகிருஷ்ணர், விவேகானந்தர் ஆகியோரின் அருளுரைகள் அவரிடம் ஆழ்ந்த பாதிப்பை ஏற்படுத்தியுள்ளன.



உபாத்தியாயராக வாழ்க்கையைத் தொடங்கினார். பின்னர் ஒரு தனியார் கல்லூரியில் பேராசிரியராகச் சேர்ந்தார். மேகாலயா என்ற தனி மாநிலம் உருவாக நடந்த இயக்கத்தில் ஸ்வெல் முக்கிய பங்கு வகித்தார். அந்தச் சமயத்தில்தான் மிகவும் பிரபலமானார். 1961ல் மாநிலம் உருவா கிற்று. அதன் பிறகு மக்களவைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ப தி னை ந் து ஆண்டுகள் மக்களவை உறுப்பினராக இருந்தார்.

பிரதமர் இந்திரா காந்தி, 1969ல் எதிர்க்கட்சியிலிருந்து உதவி சபாநாயகரைத் தேடிய போது, அவருக்கு ஸ்வெல் அகப் பட்டார். அச் சமயம் அனல் பறக்கும் விவா தங்களின் சூடு தணித்து இரு தரப்பினரின் பாராட்டையும் பெற்றார். அந்த நாட்களின் நினைவுதான் இன்று எதிர்க்கட்சிகள் இவரை ஜனாதிபதி பதவிக்கு நியமிக்க முக்கிய காரணம்.

அடுத்த தேர்தலில் இவர் தோற்ற போது, ஜனதா அரசு இவரை நார்வேக்கு அனுப்பியது - தூதராக. திருமதி இந்திரா காந்தி ம று ப டி பிரதமரான போது ஸ்வெல்லை ஒதுக்கவில்லை. அவர் திறமை புணர்ந்தவராக அவரை பர்மாவுக்குத் தூதராக அனுப்பினார். அச் சமயம் இரு நாடுகளிடையே நல்லுறவு கத்தி முனையில் நடப்பது போன்றிருந்தது. ஸ்வெல் சாமர்த் தியமாகச் சமாளித்தார்.

சாஸ்திரி நன்றாக நீச்சலடிப்பார் என் பது பலருக்கும் தெரியும். ஸ்வெல்லும் ஆரோக்கியத்துக்கு முக்கியத்துவம் தந்து, தினம் தேகப் பயிற்சி செய்கிறார். கராத் தேயில் 'கறுப்பு பெல்ட்'.

இந்திரா 1984ல் இ வ ரை க் கனடாவுக்கு அனுப்ப எண்ணினார். தூத ராகச் செல்லுமுன் பிரதமரைச் சந்தித்து அவர் கருத்துக்களை அறிந்து கொள்ள தில்லி வந்தார் ஸ்வெல். அச் சமயம்தான் இந்திரா காந்தி படுகொலை செய்யப் பட்டார். ''இது பெரிய அதிர்ச்சியை ஏற்படுத்தியது; அதன் பாதிப்பு இன் றும் என்னிடம் நீடிக்கிறது'' என்கிறார் ஸ்வெல்.

இதன் பிறகு காங்கிரஸ் உறுப்பினராக மக்களவைக்கு வந்தார். ஆனால் பின்னால் நடந்தவை காங்கிரஸிலிருந்து 1987 முதல் இவரை விலகச் செய்தன. ''சுயமரியாதை யுடன் அந்தக் கட்சியில் நீடிப்பது கடினமாக இருந்தது'' என்கிறார் ஸ்வெல்.

எதிர்க் கட்சிகள் இவரை ஆதரித்து நாடெங்கிலுமுள்ள வாக்காளர்களிடம் இவ ருக்காகப் பிரசாரம் செய்தாலும் ஸ்வெல், தமக்கு ஆதரவு தேட தமது குடும்பத் தினரையே பெரும்பாலும் நம்பியிருக் கிறார். இவர் மனைவியும் மகளும் தபா லில் இவரது அறிக்கைகளை வாக்காள ருக்கு அனுப்புவதில் இராப்பகலாக ஈடுபட் டிருக்கிறார்கள். இவர் தேர்தல் அறிக்கை யின் மையமான கருத்து தேசிய ஒருமைப் பாடு.

''வெற்றி பெறுவேன் என்ற நம்பிக் கையோடுதான் ஜனாதிபதி தேர்தலுக்கு நிற்கிறேன். ஆனால் தேர்தல் முடிவு என்னவானாலும் சரி, நாட்டின் வடகிழக்கு மூலையில் ஒரு குக்கிராமத்தில் பிறந்த ஏழை, எதிர்க்கட்சிகளால் ஜனாதிபதி பதவிக்குத் தேர்தல் வேட்பாளராக நிறுத்தி வைக்கப்படுவது என்பதே ஒரு பெரிய வெற்றிதான். அது இந்திய ஜனநாயகத்தின் வெற்றி'' என்று அழுத்தம் திருத்தமாகக் கூறுகிறார் ஸ்வெல்.

- ஹிந்துஸ்தான் டைம்ஸ்

# “உப்பு நீரே ஜலசா; என் உயிர் மூச்சே ஜலசா!”



மீனவர்கள் நிறைந்த பகுதி அது. தொழிற்சாலைக்காரர்கள் பள்ளம் தோண்டுவதைப் பார்த்த உடனேயே அவர்களின் அடிவயிற்றில் நெருப்புப் பற்றிக் கொண்டது. கழிவு நீர் வந்து விழப் போவது கடலில் மட்டுமல்ல, தம் வீட்டு உலைப்பானைகளிலும்தான் என்ற எண்ணம் அவர்களுக்குள் எழுந்தது. கவலை கொண்ட தலைவன், தன் மீனவப் படையுடன் தொழிற்சாலை ஆசாமிகளைச் சந்தித்தான்.

தொழிற்சாலை நிறுவனர்கள் மீனவர்களை வரவேற்றார்கள். தொழிற்சாலையின் கழிவு நீர் கடலில் கலந்தால், கழிவு நீரின் ரசாயனக்கலவை மீன்களைக் கொன்று விடும் என்ற மீனவர்களின் கிலியைச் சிரித்துக் கொண்டே மறுத்தார்கள். அப்படி எதுவும் நடக்காது. மீனவர்களின் வாழ்வு நசிக்காது என்று கூறியதோடு அல்லாமல், அப்பகுதியில் இருக்கும் மீனவக் குடும்பங்கள் அத்தனையிலும் ஒவ்வோர் இளைஞனுக்குத் தொழிற்சாலையில் வேலை போட்டுத்தருவதாகச் சொன்னார்கள். தவிர, ஒவ்வொரு குடும்பத்திற்கும் முந்நூறு ரூபாய் அன்பளிப்பாய்த் தருவதாக உறுதி கூறினார்கள்.

மீனவர்களின் கண்களில் கனவு விரிந்தது. முந்நூறு ரூபாய் காககளாக மேடை விட்டு நடனமாடியது. ஒவ்வொரு குடும்பத்திலும் ஓர் இளைஞனுக்கு தொழிற்சாலையில் நிரந்தர வேலை. இதை விட வேறென்ன வேண்டும்?

கேட்டுக் கொண்டிருந்த மீனவ இளைஞர்களில் ஒருவன் எழுந்து நின்றான்.

''தலைவரே, அவங்க சொல்றதை ஒத்துக்காதீங்க. ஃபாக்டரியில பி.ஏ., எம்.ஏ., படிச்சவங்களுக்குத்தான் வேலை கொடுப்பாங்க. நம்ப ஜனங்க யாருமே படிக்காதவங்க.''

தலைவன், எதிர்க்குரல் எழுப்பியவனைத் திரும்பிப் பார்த்தான்.

''போட்றா ரெண்டு. வரதையும் கெடுக்கறான்.''

வெறிகொண்ட கூட்டம், எதிர்த்துக் குரல் கொடுத்தவனைத் தாக்க முயன்றது.

அவன் எப்படியோ அங்கிருந்து தப்பித்தான்.

தொழிற்சாலை ஒவ்வொரு குடும்பத்திற்கும் ரூ. 300/- ஐக் கொடுத்தது. கழிவு நீரை அவர்கள் மீன் பிடிக்கும் கடல் பகுதியில் கலக்க விட்டது. ஒவ்வொரு குடும்பத்திலும் ஒவ்வோர் இளைஞனுக்கு வேலை என்ற வாக்குறுதியைக் காற்றில் பறக்க விட்டது. கழிவு நீர் கலந்ததால் கடல்மீன்கள் ஆயிரம் ஆயிரமாக இறக்க ஆரம்பித்தன. மீன்கள் இறந்து கொண்டிருந்ததால் சில மீன் இனங்கள் இனவிருத்தி பண்ண வழியின்றி அடியோடு அழிந்து போகத் தொடங்கின.

“இது கதையில்ல சார். உண்மையா நடந்தது. என்னூரில் இப்பவும் நடந்துக்கிட்டிருக்கு. கவர்மெண்ட் சப்போர்ட் இருக்கு அவங்களுக்கு. நான்தான் எங்க ஆளுங்க ஏமாந்து போறாங்களேன்னு, அந்த இண்டஸ்ட்ரிகாரங்களை எதுத்துப் பேசினேன். எங்க ஆளுங்களே அப்ப என் பேச்சைக் கேக்கலை. இப்பக் கஷ்டப்படறாங்க. காரணம் என்ன? யாரும் படிச்சவங்க கிடையாது, அதான்'' என்று எங்களிடம் பேச்சைத்

துவக்கிய அட்டைப்பட இளைஞரான சுப்பிரமணியத்திற்கு வயது முப்பத்தொன்று. மீனவர் இனத்தைச் சேர்ந்தவர். வானொலி நிலையத்திற்கு எதிரில் உள்ள நொச்சிக்குப்பத்தில் வசிப்பவர்.

வெல்லம் உண்ணக்கூடாது என்று சிறுவனுக்குப் புத்திமதி சொல்வதற்கு முன் தன்னுடைய வெல்லம் உண்ணும் பழக்கத்தை நிறுத்திய ராமகிருஷ்ணரைப் போல, தன் சமுதாயம் படிப்பறிவு பெற வேண்டுமெனில் முதலில் தான் படித்திருப்பது அவசியம் என்று உணர்ந்து இன்றுவரை படித்துக் கொண்டிருக்கிறார்.

''பி. எஸ் ஸி முடித்து, எம்.எஸ்ஸியில சேர்ந்து ஓஷன் லைஃப் சயின்ஸ் படிச்சேன். கடல் வாழ் உயிரினங்களைப் பத்தின படிப்பு அது. பிஎச்.டி. பண்ணணும்னு ஆசைப்பட்டேன். அப்பத்தான் இந்தத் தொழிற்சாலைக் கழிவு நீர் கடல்ல கலக்கற விஷயம் ஞாபகத்துக்கு வந்தது. நம்ப ஆராய்ச்சிக்கு ஏன் இதையே ஸப்ஜக்டா எடுத்துக்கக் கூடாதுன்னு தோணிச்சி. இப்ப பிஎச்.டி பண்றேன்.''

''என்ன ஸப்ஜக்டில நீங்க பிஎச்.டி. பண்றீங்க சுப்பிரமணி?''

''மரைன் பயாலஜி. கிண்டில 'சென்டர் ஃபார் அட்வான்ஸ் ஸ்டடி இன் பாடனி'ன்னு ஒரு அமைப்பு இருக்கு. இதன் டைரக்டர், புரொஃபசர் மஹாதேவன். அவர்தான் எனக்கு இந்த ஸப்ஜக்ட் பண்றதுக்கு ஊக்கம் கொடுத்தாரு. அவரே ஸ்காலர்ஷிப்பும் வாங்கிக் கொடுத்தார்.''

''மரைன் பயாலஜின்னா?''

''இந்த கிழக்குக் கடற்கரை, கடல் வாழ் உயிரினங்களுக்கு உற்பத்திப் பிரதேசம். புரொடக்டிவ் ஏரியா. இந்த இடத்தில

◆ மீனவர் குழந்தைகளுக்கு வகுப்புகள்....



தொழிற்சாலைகளிலேர்ந்து வர்ர கழிவு நீர் கடல்ல கலக்கறதால, கடல்வாழ் உயிரினங்களுக்கு என்ன பாதிப்பு ஏற்படுதுன்னு ஆராய்ச்சி பண்றேன். முக்கியமாக எண்ணூர் பக்கத்திலதான் தொழிற்சாலைக் கழிவு நீர் கடல்ல கலக்கறது அதிகம். இந்தக் கழிவு நீர் கடல்ல கலக்கறதால பைடோ பிளாங்க்டன்னு ஒரு தாவர நுண்ணுயிர் அடியோட செத்துப் போகுது. மீன்கள் இதைத்தான் உணவாச் சாப்பிடறது வழக்கம். அதனால மீனும் உணவில்லாம அழிஞ்சி போய்டுது. தவிர கழிவுப் பொருள்களாலே மீன்கள் நேரடியாகவும் பாதிக்கப்படுது. ஆக, இந்த மீனைப் பிடிச்சி வித்து உயிர் வாழற மீனவர் குடும்பங்களும்....''

விரக்தியாகச் சிரிக்கிறார் சுப்பிரமணியம்.

◆ நண்பர்களுடன் சுப்பிரமணியம் (தலையில் குல்லா அணிந்திருப்பவர்)





அடுத்த இதழில்...

●● **''காதல் காட்சிகளில் நடிக்கக் கூச்சமாக இருக்கிறது!''**

- மம்மூட்டி சிறப்பு பேட்டி

''தொழிலதிபர்களெல்லாம் லாபநோக்கோட தொழிற்சாலைகளை நடத்தறாங்க. கடல்ல கலக்க விடற கழிவு நீரை அவங்க சுத்திகரிச்சுக் கடல்ல கலக்க விட்டாலே பிரச்னை தீர்ந்துடும். செய்யறதில்ல. செலவாகும்கற பயம். அரசாங்கம்தான் இந்த விஷயத்தில் தலையிட்டு ஒரு நல்ல தீர்வைக் கொடுக்க முடியும். ஆனா அரசாங்கம் செய்யும்னு காத்திராம தொழிற்சாலை நிர்வாகிகளோட பேசிப் பார்க்கப் போறேன். இண்டஸ்ட்ரியலிஸ்டுகளுக்கு மனித நேயம் வந்தால் போதும். இந்த மாதிரி எல்லாம் நடக்காது.''

''அப்படி போறதுக்கு முன்னாடி உங்க தருவியை வளர்த்துக்க நினைக்கிறீங்க...''

''ஆமா; ஆனா நான் அது மட்டும் ஆராய்ச்சி பண்ணலை சார். சீசன் மாற்றப்பல்லாம் கடல் நீர்ல என்ன மாற்றம் ஏற்படுதுன்னும் ஆராய்ச்சி பண்றேன்.''

''இதனால என்ன உபயோகம்?''

''சில மீனுங்க சில சீசன்ல சில இடங்களில மாத்திரம்தான் கெடைக்கும். உதாரணத்துக்குச் சொல்றதுன்னா, கோளா மீனுன்னு ஒரு வகை. இந்த கோடைதான் அந்த மீனுக்கு சீசன். ஆனா அதைப் பிடிக்கணும்னாக் கடல்ல ரொம்ப தூரம் போகணும். கடல் ஆழத்தை நாங்க ஃபாதம்கற அளவுல சொல்வோம். தமிழ்ல பாவம்னு சொல்லுவோம். அஞ்சி மீட்டர் ஆழம்ங்கறது மூணுபாவம். கோளா மீன் அறுபது பாவம், எழுவது பாவம் ஆழம் இருக்கற எடத்துலதான் நிறைய இருக்கும். நெறையக் கிடைக்கறதால நல்ல வருமானம்னு எங்க ஆட்கள் எல்லாம் கட்டு மரத்தில ஏறி அறுவது பாவம் ஆழம் இருக்கற எடத்துக்குப் போறாங்க. அவ்வளவு தூரம் போய்த்திரும்பணும்னா மூணு நாலு நாள் ஆகும். அவ்வளவு தூரம் கடலுக்குள்ள போறப்ப கரை தெரியாது. திடீர்னு சில சமயம் புயல் வீச ஆரம்பிச்சா அவ்வளவுதான். மீனவங்க கரைக்கு வரமாட்டாங்க. தொலைஞ்சி போய்டுவாங்க. கோளா மீன் ஏன் அவ்வளவு தள்ளித்தான் கெடைக்குது? அது ஏன் பக்கத்தில கெடைக்கக்கூடாது? அது இருக்கற கடல் தண்ணில என்ன மாற்றம் இருக்கு? அந்த மாற்றத்தைக் கரைக்குப் பக்கமா இருக்கற கடல் தண்ணில கொண்டு வரமுடியாதாங்கறதெல்லாம் என் ஆராய்ச்சியோட முடிவிலதான் தெரியும்.''

''உங்க மீனவ சமுதாயத்துக்கு நீங்க இன்னும் என்ன விதத்துல பாடுபட உத்தேசம்? வேற திட்டம் ஏதாவது....?''

''ஒரு கட்டு மரத்தோட வெலை பன்னெண்டாயிரம். அதுக்கு அஞ்சு அல்லது ஆறு வருஷந்தான் லைஃப். அதுக்கப்புறம் உபயோகப்படாது. நெறைய கட்டுமரம் கட்டணும்னா செலவும் அதிகம். காடுகள் அழியறதும் நெறைய. அதனால கட்டு மரத்தோட வாழ்நாளை அதிகரிக்கணும். அதான் எப்படின்னு இப்ப ஆராய்ச்சி பண்ணிட்டிருக்கேன். எங்களைக் கலந்து பேசாம கவர்ன்மெண்ட்ல ஃபெரோ சிமெண்ட்ல கட்டுமரம் தயார் பண்ணாங்க. பாரம் அதிகமாப் போய் அது மூழ்கிடுச்சி. அப்புறம் பாலி புரொபலீன்ல கட்டுமரம் பண்ணாங்க. அது ரொம்ப லேசு. மிதக்காது. கவுந்துடுச்சி. நான் இப்ப கட்டு மரத்துக்கெல்லாம் ஃபைபர்ல உறை தயாரிக்க முடியுமான்னு பாத்துக்கிட்டிருக்கேன். இதைப் பண்ணிட்டா, கட்டுமரம் தண்ணில ஊறாது. லைஃப் ஜாஸ்தியாய்டும். ஃபைபர் லைனிங் எங்கேயாவது *கெட்டுப்போனாலும் பாட்ச் ஒட்டி ரிப்பேர் பண்ணலாம். இந்த ஆராய்ச்சில நான் தீவிரமா இருக்கேன். மீன் பிடிப்பு தொழில் சம்பந்தமா நவீன முன்னேற்றங்களைத் தெரிஞ்சுக்கிட்டு எங்க மக்களுக்கு உபயோகப்படற வழில சொல்லிக் கொடுக்கணும்னு ஆசைப்படறேன்.

''இதுக்கு மறுபக்கமா இன்னொரு அம்சமும் இருக்கு. இப்பல்லாம் மீன் பிடிக்கற தொழில்ல நெறையப் பேர் வர ஆரம்பிச்சிட்டாங்க. ஸ்டீமர் வெச்சிக்கிட்டு மீன் பிடிக்கறாங்க. படிப்பறிவே இல்லாத எங்க ஆளுங்ககிட்ட பணமும் இல்லே. போட்டா போட்டியிலே தொழில் கெட்டுப் போய் வாழ்க்கையில மேலே மேலே தாழ்ந்து போறாங்க. அதனால எங்க மக்களை நான் மீன் பிடிக்கற தொழில்லேர்ந்து மாத்தி, வேற வேலைக்குப் போற மாதிரியும் பழக்கப் போறேன். அதுக்கு முதல்ல படிப்

# இலவசம்! பக்தி புத்தகங்கள்



## இலவச பக்திப் புத்தகங்கள் எங்களிடம் ஒரே தடவை-யில் ரூ. 250-க்கு மேற்பட்ட ஸ்வீட், காரம் வாங்கு பவர்களுக்கு வாங்கும் தொகையை அனுசரித்து பக்திப் புத்தகங்கள் இலவசமாக வழங்கப்படும்.

---

கல்யாண வைபவங்களுக்கு: சீர் முறுக்கு, சீர் முள்ளுத் தேன் குழல், தேன் குழல், அதிரசம், திரட்டுப்பால், அப்பம், பருப்புத் தேங்காய் வகைகள் முதலியவை செய்துத் தரப்படும்.

---

## தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

24, 2-வது மெயின் ரோடு,
காந்தி நகர், அடையாறு,
சென்னை-600 020.
போன்: 412557

# இப்பொழுது உங்கள் குழந்தைக்கு சாதாரண அரிசி தானியத்தைவிட மேலான உணவை கொடுங்கள்.

அறிமுகப்படுத்துகிறோம்

## ஃபாரெக்ஸ்-ரைஸ்
### பால் அடங்கியது

சுவையும் ஊட்டச்சத்தும் கொண்டது.

சாதாரண அரிசி தானியத்தைக் கொடுத்து குழந்தையின் திட உணவைத் தொடங்குவதைவிட ஃபாரெக்ஸ் – ரைஸ் அளியுங்கள்.

ஃபாரெக்ஸ் – ரைஸ் பாலின் ஊட்டமும், வைட்டமின்களும், தாதுப்பொருட்களும் கொண்டது. எளிதில் ஜீரணிக்கக் கூடியது.

தேவையான ஊட்டச்சத்தை சுவையான வழியில் உங்கள் குழந்தைக்கு கொடுக்க ஒரே வழி. ஃபாரெக்ஸ் – ரைஸ் நீருடன் கலந்து அளித்தால் போதுமானது.

நான்கு மாதங்கள் முதல்

**ஃபாரெக்ஸ்-ரைஸ்**
**சுவையுடன் வளரும் வழி.**






முக்கிய அறிவிப்பு: தாய்ப்பால் உங்கள் குழந்தைக்குச் சிறந்தது. நான்கு மாதங்கள் முதல், உங்கள் குழந்தைக்கு தாய்ப்பால் மட்டுமின்றி, தானிய உணவையும் கொடுங்கள்.

Gx.646.92.Tm

பறிவு வேணும். அதனால இவங்களுக்குப் படிப்பு சொல்லித்தரப் போறேன்.''

''இதுக்கு ஏதாவது முயற்சி எடுத்திருக் கீங்களா?''

''ம்ம்ம்.. Float னு ஒரு அமைப்பு நிறுவியிருக்கேன். Fisherfolk Organisation for Advancement ங்கறதோட சுருக்கம். தமிழ்ல சொல்லணும்னா மீ ன வ ர் மேம்பாட்டு அமைப்பு. எங்க ஆளுங்க கல்வியறிவு இல் லாத காரணத்தால சமுதாயத்தோட ஒட்ட முடியமாட்டேங்குது. அதை மாத்தணும். எங்க இளைஞர்கள்கிட்ட ஒரு விழிப்புணர்ச் சியை உருவாக்கணும். படிப்பறிவு இல்லாத வங்களை எல்லாம் கூப்பிட்டு ப ரீ ட் சை, வகுப்புன்னு எல்லாம் இல்லாம சொல்லித் தரோம். குழந்தைங்களுக்கு யூனிஃபார்ம் புஸ்தகம் எல்லாம் கொடுத்து வ கு ப் பு நடத்தறோம். ப்ளஸ் டூ, பத்தாவதுன்னு முடிச்சிட்டு சும்மா இருக்கற இளைஞர்கள் சிலபேர் இருக்காங்க. அவங்களை வச்சி, இந்த Float மூலமா படிப்பு சொல்லித் தர்றோம்.''

''நல்ல ஆரம்பம்தான். சரி உங்களுக்குக் கல்யாணம்?''

சிரிக்கிறார். வெட்கச்சிரிப்பு.

''இன்னும் ஆகலை. செப்டம்பர்ல நடக்கப்போவுது. பொண்ணு பி.ஏ. அப்பா அம்மா பாத்து ஏற்பாடு பண்ணியிருக்கற பொண்ணு. கல்யாணம் பண்ணி வந்த வுடனே எனக்கு உ த வி யா இருக்கப் போறேன்னு சொல்லிட்டிருக்கு. எனக்கு இன்னொரு உதவிக் கரம்.''

''நீங்க சம்பாதிக்கிறீங்களா?''

''இல்லேன்னும் சொல்லலாம். உண் டுன்னும் சொல்லலாம்....''

''அப்படின்னா?''

''அப்பப்ப கடலுக்குப் போய் மீன் பிடிச்சிட்டு வரேன். படிச்ச படிப்புக்கு ஒரு வேலை கெடைக்காமயா போய்டும்! சோத் துக்கு வேலைங்கறது எனக்குப் பிடிக்கலை. எனக்கு சமூக சேவைலதான் விருப்பம் அதிகம். எங்க சமூகம் முன்னேறணும். அத னால நான் அதுக்குத்தான் முக்கியத்துவம் தருவேன்.''

லட்சியம் தொடர்ந்து பேசியது. இப் படி ஒரு ஜீவன் இருப்பதே பெருமையாகத் தான் இருக்கிறது. ஒவ்வொரு சமூக அமைப்பிலும் இப்படி ஒருவர் இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று மனம் ஆசைப்படுகிறது.

சந்திப்பு : சுரேஷ் - பாலா
அட்டை வண்ணப்படமும்
படங்களும் : சாரி



# ‘நம்மால் முடியும்’ நம்புங்கள்!

போர் ஆரம்பிப்பதற்கு முன் நெப்போலியன்
தம்முடைய படை வீரர்களை அழைத்து, ‘கடவுள்
நம் பக்கம் இருக்கிறார்; அதனால் வெற்றி நமக்கு உறுதி’
என்பார். ‘கடவுள் நம் பக்கம்தான் இருக்கிறார் என்பதற்கு
என்ன ஆதாரம்?’ என்று கேட்ட போது, ‘இந்த
நாணயத்தைச் சுண்டுகிறேன். தலை விழுந்தால்
கடவுள் நம் பக்கம் இருக்கிறார் - நாம் போரிடுவோம்.
பூ விழுந்தால் போரிடுவதைத் தள்ளி வைப்போம்’
என்பார். நாணயம் சுண்டப்படும். தலை வரும். படை
வீரர்கள், நம்மால் ஜெயிக்க முடியும் என்று முழு நம்பிக்
கையுடன் போரிட்டு ஜெயிப்பார்கள். இப்படி ஒவ்வொரு
தடவையும் நாணயம் சுண்டப்படும் போது தவறாமல் தலை
விழுந்தது. நெப்போலியனின் படை ஜெயித்தது,
கடைசி முறை தவிர.

கடைசிப் போரில் மட்டும் ஏன் வெற்றி பெற முடியவில்லை?
கடைசிப் போருக்கு முன் நெப்போலியன் தன் கூடாரத்தில்
கவலையுடன் அமர்ந்திருந்தார். தளபதி அங்கு வந்தார்.
“என்ன ஆயிற்று? ஏன் கவலை?” என்று கேட்டார்.
“நாணயம் காணாமல் போய் விட்டது!”
என்றார் நெப்போலியன்.
“அதனால் என்ன! என்னிடம் வேறு
நாணயம் இருக்கிறது” என்றார் தளபதி.
“அது வேண்டாம். பழைய நாண யம்தான் வேண்டும்!”
“அப்படி என்ன அதில் விசேஷம்?”

''அதில்தான் இரண்டு பக்கமும் தலை பொறிக்கப்பட்டிருக்கிறது!''

இது உண்மையா, கதையா தெரியாது. ஆனால் உண்மையாக இருந்தால் ஆச்சரியப்படுவதற்கில்லை. நம்மில் பலர் எந்தவிதச் சாதனையும் செய்யாததற்குக் காரணம், சாதிக்க முடியும் என்ற நம்பிக்கை இல்லாததால்தான்.



பொன். இளங்கோ

சில மாதங்களுக்கு முன் கோவை மருத்துவக் கல்லூரியில் நான் உரையாற்றிய பின், அங்குள்ள மருத்துவர்கள், இன்றைக்கும் நோயாளிகள் குணமடைவதற்கு நம்பிக்கையே ஐம்பது சதவிகிதம் காரணம் என்பதை ஏற்றுக் கொண்டனர்.

புதரில் உள்ள இரண்டு பறவைகளை விட, கையில் கிடைத்த ஒரு பறவையே போதும் என்று இருக்க வேண்டிய அவசியம் இல்லை. ஒன்று கையில் இருக்கிறது என்பதற்காக, இரண்டை இழக்கக் கூடாது.

'குதிரையைத் தண்ணீர்த் தொட்டிக்கு அழைத்துத்தான் செல்ல முடியும். குடிக்க வைக்கவா முடியும்?' என்று யாரேனும் கேட்டால், 'முடியும்' என்று சொல்ல வேண்டும்.

ஆகாசக் கோட்டை கட்டுங்கள். தவறே இல்லை. கனவை நிச்சயம் நனவாக்க முடியும்.

லட்சக்கணக்கில் மருத்துவக் கல்லூரி வீட்டுக்குக் கொடுத்து, எம்.பி.பி.எஸ். தேறிய பிறகு, சொற்ப அரசாங்கச் சம்பளத்தைப் பெறுகிறார் ஒரு டாக்டர். மாதச் சம்பளம் என்று வருகிறதே என்ற பாதுகாப்பு இருக்கிறதாம். தனியாக பிராக்டீஸ் செய்தால் அவர் ஏராளமாய்ச் சம்பாதிக்கலாம். அதற்குத் தன்னம்பிக்கை வேண்டும்.

நம்பிக்கையை எப்படி வளர்த்துக் கொள்ளுவது?

மூன்று பட்டியல்களைத் தயார் செய்து கொள்ளுங்கள் : முதலாவது, உங்களுடைய சாதனைப் பட்டியல். பெரிய, சிறிய, மிகச் சிறிய என்று எல்லாச் சாதனைகளும் இப்பட்டியலில் இருக்கட்டும். இரண்டாவது, உங்களுடைய சொத்துக்களின் பட்டியல். சொத்து என்பது வெறும் வீடு, வாசல், பணம் மட்டுமல்ல; நீங்களே ஒரு பெரிய சொத்து என்பதை நினைவில் கொள்ளுங்கள். உங்கள் அற்புதங்களைப் பட்டியலிடுங்கள். மூன்றாவது பட்டியல், உடல் ஊனமுற்றோர் சாதனைப் பட்டியல். அவர்களே சாதித்துள்ள போது உங்களால் முடியாதா!

இந்த மூன்று பட்டியல்களையும், தினம் காலையில் ஒரு முறை படியுங்கள்.

ஒரு சில நாட்களிலேயே, வாழ்க்கையின் வெற்றிப் பாதையில் அதிவேகமாகப் பயணம் செய்வதை உணர்வீர்கள்!

நெஞ்சில் நம்பிக்கை இருந்தால் வாழ்க்கைப் பாதை வெற்றியை நோக்கித்தான்!

> இளைஞர் பொன். இளங்கோ, சென்னை, கோவை, திருச்சி ஆகிய நகரங்களில் ஏராளமான இளைஞர் - யுவதிகளுக்குச் சுய முன்னேற்றம், பேச்சுத்திறன், தன்னம்பிக்கை, வெற்றிகரமான வாழ்க்கை அமைப்பது எப்படி என்று வகுப்புகள் மூலம் பயிற்சி அளித்து வருகிறார். அவ்வப்போது கல்கியில் இவரது கட்டுரைகள் இடம்பெறும். - ஆர்.

**- பொன். இளங்கோ கூறுகிறார்...**

கல்கி

1992
ஜூலை 12
மலர் : 50
இதழ் : 50
ஆங்கீரச
ஆனி 28

# வெற்றி மாநாடு

ஓராண்டு ஆட்சிக்குப் பிறகும் மக்கள் மீது தமக்குள்ள செல்வாக்கு இம்மியும் குறையவில்லை என்று நிரூபிப்பது முதல்வர் ஜெயலலிதாவின் நோக்கம் எனில், மதுரை மாநாடு மாபெரும் வெற்றி என்பதில் சந்தேகமில்லை. ஆட்சிக்கு வருமுன் தேர்தல் வாக்குறுதிகளை அள்ளி வீசும் போது ஏற்படும் எதிர்பார்ப்பு தலைவரின் மதிப்பை உயர்த்தும்; ஆட்சிக்கு வந்த பிறகு நிகழும் சில அவலங்கள் ஏமாற்றத்தை உண்டாக்க, செல்வாக்கு சரியும். இந்த நியதிக்குத் தாம் விதிவிலக்கு என்பதை ஜெயலலிதா உணர்த்தியிருக்கிறார். 'அடேயப்பா! என்ன கூட்டம்! எத்தனை ஆர்வம்!' என்று நாமும் மலைக்கிறோம்.

ஜெயலலிதாவின் ஓராண்டு ஆட்சியில் பல குற்றம் குறைகள் இருக்கத்தான் செய்கின்றன. அவற்றை நாம் பட்டியலிட்டும் ஆகி விட்டது. 'குறைகள், மற்றும் ஊழல் புகார்கள் நிமித்தம் அமைச்சரவை மீது கைவைக்கத் துணிந்தால்...' என்று மத்திய அரசை எச்சரிப்பதும் மாநாட்டின் நோக்கம் எனில் அதிலும் ஜெக்கு அபார வெற்றியே. டிஸ்மிஸ், மறு தேர்தல் என்றெல்லாம் நிகழுமானால் முன்னை விடவும் சக்தி வாய்ந்த விதத்தில் வெற்றி பெற முடியும் என்பதைச் சந்தேகத்துக்கிடமின்றி எடுத்துக் காட்டியிருக்கிறார்.

இந்த அம்சம் தவிர, மதுரை மாநாடு வேறு எதைச் சாதித்தது என்று பார்த்தால் நமக்கு ஏமாற்றம்தான் மிஞ்சுகிறது. வெள்ளி சிம்மாசனம், வைரம் பதித்த தங்கக் கிரீடம், செங்கோல், வாள் உள்ளிட்ட இவ்வளவு ஆடம்பரம் தேவையா? இத்தனை விளம்பரங்கள் அவசியமா? கட்சிப் பணம் மட்டுமே செலவழிந்தது என்றாலும் கசக்கிப் பிழிந்தது எவ்வளவு? கட்சித் தொண்டர்கள் தவிர அரசு இயந்திரம் முடுக்கி விடப்படவில்லை என்றும் அரசுப் பணம் செலவாகவே இல்லை என்றும் சொல்ல முடியாதே? மக்களின் வரிப் பணத்தில் நாளிதழ்களில் பக்கம் பக்கமாக எத்தனை அரசுத் துறை விளம்பரங்கள்! ஜெயலலிதா ஒருவேளை தங்கலாம் என்ற எதிர்பார்ப்பில் அரசு மாளிகை புதுப்பிக்கப்பட்டதிலே எத்தனை லட்சம் செலவு! கடைசியில் அவர் தங்கியதோ ஹோட்டலில்! பல்லாயிரக்கணக்கான வாகனங்களுக்காக அரிதான எரிபொருள் எத்தனை வீணானது? எத்தனை அமைச்சர்கள் அரசுப் பணிகளைக் கவனியாமல் மதுரையில் முகாமிட்டார்கள்? இப்படிக் கேள்விகளை அடுக்கிக் கொண்டே போகலாம்.

'இ. காங்கிரஸ் மாநாடு திருப்பதியில் நடக்கவில்லையா? தி. மு. க. ஆட்சியிலிருந்த போது அவர்கள் மாநாடு நடத்த, அதிகாரத் துஷ்பிரயோகம் ஆகவில்லையா?' என்றெல்லாம் திருப்பிக் கேட்டுப் பயனில்லை. ஏற்கெனவே பலர் செய்த தவறுகளைத் தொடர்ந்து செய்யவா மக்கள் ஜெயலலிதாவைத் தேர்ந்தெடுத்தார்கள்? இல்லவே இல்லை. ஜெயிடம் நாம் வித்தியாசமான அணுகுமுறையை எதிர்பார்த்தோம். இப்போதும் எதிர்பார்க்கிறோம். காலம் கடந்து விடவில்லை. மனம் மாறலாம். எப்படி?

சிக்கனத்துக்கும் அடக்கத்துக்கும் அவர் எடுத்துக்காட்டாக விளங்கி, மக்களிடம், ''வீண் செலவு வேண்டாம்; சேமியுங்கள்; சேமிப்பைத் தொழில் துறைகளில் முதலீடு செய்து. உதவுங்கள்'' என்று சொல்லலாம். தொழில்கள் தொடங்க இங்குள்ள ஓராயிரம் தடைகளை ஆராய்ந்து பார்த்து நீக்கலாம். பிற மாநிலத் தொழிலதிபர்கள் இங்கே தொழில் தொடங்க ஆர்வத்துடன் முன்வரக்கூடிய சூழலை உருவாக்கலாம். நல்ல கல்வி தந்து திறமைகளை வளர்க்கலாம். குறைந்த பட்சம் திறமைக்குத் தடைவிதிக்காமலாவது இருக்கலாம்! இன்னும் பாஸிடிவ்வாக எவ்வளவோ செய்யலாம்.

சர்ச்சில் யுத்த காலத்தில் சொன்னார், ''சம்பளத்துக்காக எட்டு மணி நேரம் உழையுங்கள் ; நாட்டுக்காக மேலும் ஒரு மணி நேரம் உழையுங்கள்!'' என்று. மக்கள் மெய்சிலிர்த்தார்கள். தலைவரின் கோரிக்கையைப் பூர்த்தி செய்து உலக யுத்தத்தில் மாபெரும் வெற்றி அடைந்தார்கள். இன்று இந்தியாவிலும் ஒரு யுத்த கால முயற்சி நாட்டை மேம்படுத்தத் தேவைப்படுகிறது. அதற்குத் தமிழகம் உதவக் கடமைப்பட்டிருக்கிறது. ஜெயலலிதா மக்களிடம் தமக்குள்ள அமோகமான செல்வாக்கைப் பயன்படுத்தி, உயர்ந்த நோக்கங்களை அவர்களிடம் உருவாக்கி, அதற்காகப் பாடுபடச் செய்ய வேண்டும். இந்த ஆக்கபூர்வமான சாதனையை ஜெயலலிதா நிகழ்த்திக் காட்டாவிட்டால் ஓர் அருமையான வாய்ப்பை அவர் மட்டுமின்றி, தமிழகமே இழந்து விட்டதாகும்.

# போஸ்டருக்குத் தடை!

கற்பனை : ஜூலி; படங்கள் : நடனம்



"நாங்க போஸ்டரைத் தான் ஒழிச்சோம், எப்படி...?"

"ஹி... ஹி... எங்க வீட்டுக்குக் காம்பவுண்டு சுவரே கிடையாதுங்க. ஒண்ணு மேல ஒண்ணா ஒட்டின போஸ்டர்தான் இத்தனை நாள் சுவர் போல் இருந்திச்சு!"

"என்ன சார்! இவ்வளவு பேரிச்சம்பழம் வெச்சிருக்கீங்க?"

"போஸ்டர் அடிக்கிற அச்சகம் வெச்சிருந்தேன். இப்ப பிஸினெஸ் படுத்துப் போச், மிஷினையெல்லாம் போட்டுப் பேரிச்சம்பழம் வாங்கிட்டேன்."





"என்ன ஒரே டிராஃபிக் ஜாம்?"

"போஸ்டர் ஒட்டத் தடை சட்டத்தை எதிர்த்து, சென்னை நகர மாடுகள் தர்ணா பண்ணுதுங்களாம்."

"என்ன, பள்ளிக் குழந்தைகளுக்கு போஸ்டர் வழங்கும் விழாவா?"

"ஆமாம்! ஸ்கூல் திறக்கும் சீஸன்சே! ஒட்ட முடியாம, மீதமிருக்கிற போஸ்டர்களைக் புத்தகங்களுக்கு அட்டை போட்டுக்கக் குழந்தைகளுக்கு இலவசமாகத் தரத்தான் இந்த விழா!"






"என்ன ஆச்சு இவருக்கு? வீட்டுக்குள்ள சுவர் முழுக்க போஸ்டர் ஒட்டியிருக்கு?"

"ரோடுல போஸ்டர், ஒட்ட முடியாது! ஆனாலும் பிறந்த நாளுக்குப் போஸ்டரைப் பார்க்காட்டா இவருக்கு மண்டை வெடிச்சிடும். அதற்குத்தான் இந்த ஏற்பாடு!"

# அழகு மிளிரும் அடர்த்தியான கூந்தலுக்கு

**நம்பகமான ஒரே கூந்தல் தைலம்**

# குணா

## கூந்தல் தைலம்



* இயற்கை தரும் அதி அற்புதமான மூலிகைகள் அடங்கியது.
* கேசத்திற்கு செழுமையூட்ட தூய தேங்காய் எண்ணெயையும்
* நாளெல்லாம் நறுமணம் வீச அரிய பல மூலப் பொருட்களையும் கொண்டது
* "குணா" அளிப்பது ஆரோக்யமான, செழுமையான நீண்ட கூந்தல்
* 120 Ml.பாட்டிலின் விலை ரூ 19.50 மட்டுமே

# இதோ எங்களது அறிமுகம் குணா ஃபேஸ் க்ரீம்



**மாசு மருவற்ற மென்மையான முக எழிலுக்கு**

- பாரம்பரிய முறையில் தயாரானது
- அரிய பல உன்னத மூலிகைகளைத் தன்னகத்தே கொண்டது.
- முகத்திலுள்ள சருமம் வறண்டு விடுவதையும், கறுத்து விடுவதையும தவிர்க்கும் விசேஷ மூலப்பொருட்கள் அடங்கியது.
- எல்லாக் காலங்களிலும் உபயோகப் படுத்தக் கூடியது.
- உங்களது முக எழிலை மனதிற்க் கொண்டு தயாரிக்கப்பட்ட – அதி உன்னத "குணா" ஃபேஸ் கிரீம் இப்பொழுது எங்கும் கிடைக்கிறது.
- 50 கிராம் பேக்கின் விலை ரூ. 14·75 மட்டுமே.

விபரங்களுக்கு

## நவசக்தி வைத்தியசாலை

**த.பெ.எண்: 7, சேலம்–636001**

எல்லா மருந்து, மளிகை மற்றும் ஜெனரல் ஸ்டோர்களிலும் கிடைக்கிறது.

ஆண்கள் பெண்கள் அனைவருக்கும் ஏற்றது.

# பங்கு மார்க்கெட் படுத்து விடவில்லை!

என்னதான் ஹர்ஷத் மேத்தா விவகாரம் அமர்க்களப்பட்டாலும் பங்கு மார்க்கெட் சரிந்ததே தவிர, படுத்து விடவில்லை. புதிய புதிய தொழில்களுக்கும் விரிவாக்கங்களுக்கும் தொழிலதிபர்கள் பங்கு மார்க்கெட்டுக்கு வந்தவண்ணம் இருக்கிறார்கள். சீக்கிரமே மக்களிடம் முதலீடு கோரி வர விருக்கும் சில நிறுவனங்கள் பற்றிய விவரங்கள் கீழே தரப்படுகின்றன. இவற்றில் இன்று முதலீடு செய்வது நாளை லாபகரமாக அமைய வாய்ப்புண்டு.

## தமிழ்நாடு ஜெய்பாரத் மில்ஸ்

அருப்புக்கோட்டை ஜெயவிலாஸ் குரூப் நிறுவனங்களில் ஒன்று. ராமலிங்கம் மில்ஸ், ஜெயஜோதி மில்ஸ் என்றெல்லாம் நூற்பு, நெசவாலைகள் நடத்தி அனுபவம் பெற்றவர்கள். தற்போது பருத்தி நூலுக்கு ஏற்றுமதி வாய்ப்பு ரொம்ப அதிகம். ஜெய்பாரத் மில்ஸில் உற்பத்தியாகும் நூல், நூறு சதமும் ஏற்றுமதியாகும். 25000 ஸ்பிண்டில்கள் உள்ள மில், நெல்லை கட்டபொம்மன் மாவட்டத்தில் ஒரு கிராமத்தில் அமைகிறது. கம்பெனி இயக்குனர்கள் இத்துறையில் பிரபலமானவர்கள். நிர்வாகிகள் சிறப்புப் பயிற்சி பெற்றவர்கள். மொத்த முதலீடான 12 கோடி ரூபாயில் பொது மக்களுக்கு இவர்கள் வழங்க இருக்கும் பத்து ரூபாய்ப் பங்குகளின் மொத்த மதிப்பு ஆறு கோடி.

## சம்பல் ஃபெர்டிலைஸர்ஸ், கெமிகல்ஸ்

கே. கே. பிர்லா குரூப் நிறுவனமான ஜுவாரி அக்ரோ கெமிகல்ஸ், இந்தப் புதிய கம்பெனியைத் தோற்றுவிக்கிறது. கே. கே. பிர்லா குரூப் நிறுவனங்கள் எல்லாமே சிறப்பாக நடப்பவை. இந்தப் புதிய தொழிலகம் ஒரு நாளைக்கு 1350 டன் அமோனியா உற்பத்தி செய்யும். இது ரசாயன உர உற்பத்திக்கு உதவுகிற மூலப் பொருளாகும். தொழிலகம் ராஜஸ்தானில் கோட்டா என்ற இடத்தில் உருவாகிறது. திட்டத்துக்கு மிகப் பெரிய அளவில் முதலீடு தேவைப்படுகிறது : ரூ 1267 கோடி! இதில் பிர்லா குரூப் அதிபர்களின் முதலீடு, வங்கிகள் - நிதி நிறுவனங்களின் முதலீடு, அயல்நாட்டுக் கடன்கள் எல்லாம் போக மீதி 424 கோடி ரூபாய்க்கு டிபென்சர்கள் (கடன் பத்திரங்கள்) மக்களுக்கு வழங்கப்படுகின்றன. இந்த டிபென்சர்களை பின்னால் பங்குகளாக மாற்றிக் கொள்ளலாம் - குறிப்பிட்ட கால இடைவெளிகளில்.

ஒரு டிபென்சரின் மதிப்பு ரூ 200 எனில் அதில் ஒவ்வொன்றும் ரூ 10 பெறுமானமுள்ள ஐந்து பங்குகள் உடனடியாக வழங்கப்படும். பாக்கி ரூ 150க்கு மீண்டும் ஐந்து பங்குகள் குறிப்பிட்ட காலக் கெடுவுக்குள் வழங்கப்படும். அதாவது இரண்டாவது தவணையில் மாற்றப்படும் பத்து ரூபாய் பங்குகளுக்கு ரூ 20 வரை கூடுதல் தொகை தர வேண்டியிருக்கும். (ரூ 30 X 5 =ரூ 150/-) ஆனாலும் ரசாயன உரங்களுக்குத் தேவை நாளுக்கு நாள் அதிகரித்து வருவதாலும், தொழில் துறையில் ரொம்ப அனுபவசாலிகளான பிர்லா குரூப் ஆரம்பிக்கும் தொழிலகமானதாலும் சீக்கிரமே நிறுவனம் லாபம் காணும் என்றும் பங்குகளின் மதிப்பு பன்மடங்கு உயரும் என்றும் எதிர்பார்க்கலாம்.

## தேவ் ஃபாஸனர்ஸ் லிட்

ஒன்றோடொன்று இணைக்க உதவும் பல வகையான நட்டுகள் போல்டுகள் போன்றவற்றைப் பொதுவாக ஃபாஸனர்கள் என்று சொல்கிறார்கள். இவற்றில் மோட்டார் கார் உற்பத்தித் துறை, இதர பல இன்ஜினீரிங் துறைகளில் உபயோகப்படுகிறவை விசேஷ உலோகக் கலவைத் தரத்தில் தயாராக வேண்டும். இத் துறையில் நல்ல ஞானமுடைய குழுவினர் ஆரம்பித்துள்ள இத் தொழிலகம் மதுராந்தகம் அருகே ஒரு கிராமத்தில் அமைகிறது. ஒவ்வொன்றும் பத்து ரூபாய் பெறுமானமுள்ள பங்குகளை மூன்று கோடி ரூபாய்க்குப் பொது மக்களுக்கு வழங்குகிறார்கள்.

முதலீட்டாளர்களுக்குச் சிபாரிசு செய்யப்படும் வேறு சில நிறுவனங்கள் பற்றிய விவரங்கள் அடுத்த வாரம்.

- வி. கோபாலன்

# திறப்புகள்



கடைசியாகத்தான் வசுமதி விஸ்வநாதனிடம் வந்தாள்.

எவ்வித வார்த்தைகளுமின்றி அவனிடம் திருமண அழைப்பிதழை நீட்டினாள்.

விஸ்வநாதனுக்கு வலித்தது.

வசுமதி ஒன்றும் பேசவில்லை.

முகம் அழுதுவிடுவதைப் போலிருந்தது.

விஸ்வநாதன் ஒரு வார்த்தை பேசினால் கூட அவள் கண்கள் காட்டிக் கொடுத்து விடும். பக்கத்தில் அவளது தோழி இந்து மௌனமாய் நின்று கொண்டிருந்தாள்.

இவர்கள் வேதனை தெரிந்த ஒரே ஆள் அவன்தான்.

வசுமதி மெல்ல நகர்ந்து போனாள்.

பத்திரிகையைப் பிரித்தான்.

வசுமதி வெட்ஸ் ராமகிருஷ்ணன்.

இவன் பெயர் இருக்க வேண்டிய இடத்தில் ஏதோ ஒரு ராமகிருஷ்ணன்.

இவனுக்குத் தன் மேலேயே வெறுப்பாக வந்தது.

பெண் முதலில் தன் காதலை வெளிப்படுத்துவது மிகவும் அபூர்வம்.

வசுமதி அபூர்வமானவள்தான்!

அன்று எதேச்சையாகத்தான் லைப்ரரியில் வசுமதியைப் பார்த்தான்.

இவனைப் பார்த்தவுடன் அவள் முகத்தில் பளீரென ஒற்றைப் பூ பூத்தது.

இப்போது எல்லாம் இவனைப் பார்த்ததும் அவள் முகத்தில் ஒரு அலாதியான இளக்கம் வந்து விடுகிறது.

இவன் அவளைப் பார்த்து மெலிதாகச் சிரித்தான்.

''விஸ்வநாதன்... உங்களுக்கு எதுவும் வேலையில்லையே... கொஞ்ச நேரம் பேசலாமோ...?''

அவன் எதிர்பார்த்ததுதான்.

என்றோ ஒருநாள் அலுவலகத்தில் நிகழப் போகிறது என்றுதான் நினைத்திருந்தான்.

குல்மோஹர் மரத்தடியில் அமர்ந்தார்கள்.

வசுமதி சுற்றி வளைக்கவில்லை.

''என்னைப் பற்றி என்ன நினைக்கிறீங்க விசு...?''

மி க வு ம் நெருக்கமானவர்களுக்கு மட்டும் அவன் விசு.

''நல்ல பெண்... புத்திசாலி...!''



''மட்டும்தானா...?''

''மட்டுமல்ல... அழகான பெண்... மிகவும் அன்பானவள்...!''

அவள் தலைகுனிந்திருந்தாள்.

இவனுக்குச் சற்று வருத்தமாயிருந்தது.

அவளின் தயக்கம் புரிந்தது.

''என்ன வசுமதி?''

அவள் இவன் கண்களுக்குள் நேராகப் பார்த்தாள்.

''புரியவில்லையா விசு?''

விஸ்வநாதன் நீளமாய்ப் பெருமூச்சு விட்டான்.

''புரிகிறது வசுமதி... என்னை நான் கட்டிப் போட்டு வைத்திருக்கிறேன் வசுமதி...!''

''என்ன சொல்றீங்க விசு?''

''ஆமாம்... என்னுடைய திருமணம் என்பதில் எனக்கு அபிப்ராய சுதந்திரம் கிடையாது. என் குழந்தைப் பருவத்திலேயே என் திருமணம் முடிவாகி விட்டது..!''

வசுமதி மெலிதாய் அதிர்ந்தாள்.

''யார் விசு?''

''என் மாமா பெண்...!''

''ஏன்?''

''நன்றிக் கடன்.''

''நன்றிக்கடனா?''

''ஆமாம்.''

நன்றிக் கடன்தான்.

விஸ்வநாதனுக்கு மூன்று வயதிருக்கும் போது அவன் தந்தை இறந்து போனார்.

அம்மா மிகவும் வெகுளி.

அவளின் உலகம் பற்றிய கணிப்புகள் மிகவும் எளிமையானவை.

மாமாதான் அம்மாவுக்குச் சகலமும் செய்தார்.

மாமா என்றால் அம்மாவின் சொந்த உடன் பிறப்பு அல்ல.

தூரத்துச் சொந்தம்.

மாமா நினைத்திருந்தால் நழுவியிருக்கலாம்.

சொந்தச் சகோதரன் போல் எல்லாம் செய்தார்.

விஸ்வநாதனை வளர்த்தார். படிக்க வைத்தார்.

விஸ்வநாதனின் வளர்ச்சிக்கு அவர் தான் அடியுரம்.

அவரின் விருப்பத்தை நிறைவேற்றுவதுதான் இவனது குறிக்கோள்.

ராதிகா மனசிலும் அதுவே பதிவாகியிருந்தது.

இருப்பினும் அவனுக்கும் மனசு என்ற ஒன்று இருக்கிறதே!

வசுமதியைப் பார்க்கும் பொழுதெல்லாம் அவன் சலனப்பட்டான்.

மிகவும் கஷ்டப்பட்டு மனசை இறுக்கிக் கொள்வான்.

இது பெரிய சித்திரவதை.

வசுமதி தானாக மனசைத் திறந்து விட்டாள்.

வசுமதியின் கண்களில் மெலிதாகக் கண்ணீர்.

''நா என்ன பண்றது வசுமதி?''

''உங்களைக் கட்டாயப்படுத்த மாட்டேன் விசு! உங்கள் பக்கம் நியாயமிருக்கிறது..!''

விஸ்வநாதன் அவள் விரல்களை ஆறுதலாகப் பற்றினான்.

''நீங்கள் வேறு வாழ்க்கை அமைத்துக் கொள்ளுங்கள் வசுமதி. எனக்குத்தான் அதிர்ஷ்டம் இல்லை. அந்த அதிர்ஷ்டசாலியைத் தேடிப் பிடித்து வாழ்க்கையைச் சந்தோஷமாக்கிக் கொள்ளுங்கள்...!''

அதற்கப்புறம் அவர்கள் பேசிக் கொள்ளவில்லை.

சரியாக ஆறு மாதம் கழித்து அழைப்பிதழ் கொடுக்கிறாள்.

விஸ்வநாதனுக்கு அலுவலகத்தில் இருக்கப் பிடிக்கவில்லை.

அம்மா இவனை ஆச்சர்யத்துடன் பார்த்தாள்.

''ராதிகா வந்திருக்கிறது தெரியுமா?''

விஸ்வநாதனுக்கு எரிச்சலாய் வந்தது.

''ஹாய் விசு...!''

ராதிகா மாடியிலிருந்து இறங்கினாள்.

ராதிகா புயல்.

வசுமதி தென்றல்.

இந்தப் புயல் இவனை எப்படியெல்லாம் புரட்டிப் போடப் போகிறதோ?

''சீக்கிரம் கிளம்புங்க... டிரஸ் மாத்திட்டு வாங்க..!''

''எங்க...?''

''ச்... சொன்னாக் கிளம்புங்க...?''

ராதிகாவுக்கு எப்பவுமே கட்டளை விட்டுத்தான் பழக்கம்.

அம்மா இவர்களைப் பார்த்து மெலிதாகச் சிரித்தாள்.

விஸ்வநாதனுக்குத் தனிமை தேவைப்பட்டது.

ராதிகாவை மறுக்க முடியாது. விட மாட்டார்கள். அம்மா சிபாரிசு வேறு.

விருப்பமில்லாமல் கிளம்பினான்.

கண்ணாடித் தம்ளரில் ராதிகா தாளம் போட்டுக் கொண்டிருந்தாள்.

விஸ்வநாதன் வெளியே பார்த்துக் கொண்டிருந்தான்.

இவன் முன் சொடக்குப் போட்டாள்.

''ஹேய்... என்னாச்சு... முக்கியமான விஷயம் பேசலாம்னு வந்தா... இப்படி டல்லடிக்கிற!''

விஸ்வநாதன் வலுக்கட்டாயமாக நிமிர்ந்தான்.

''இன்னும் நாலு மாசத்துல படிப்பு முடியுது..!''

''ஆமாம்... மேலே படிக்க வேண்டியது தானே...!''

''அப்பாவும் அதான் சொல்றார்... ஆனா கல்யாணம் பண்ணிட்டுப் படிங்கிறாரே...!''

''நீ என்ன சொல்றே ராதிகா?''

''ஏன் விசு... இந்தப் பெரியவங்க எல்லாரும் இப்படிச் சுயநலமாயிருக்காங்க...?''

விசு சடாரென நிமிர்ந்தான்.

''என்ன சொல்றே ராதிகா?''

''அவங்க சந்தோஷத்துக்காகக் குழந்தைகளை வளைக்கப் பாக்குறாங்களே... நல்லாவா இருக்கு?''

''சுத்தி வளைக்காம நேரிடையாச் சொல்லு...!''

''உனக்குன்னு தனி அபிப்ராயம் கிடையாது விசு... என் அப்பாவின் அபிப்ராயம் தான் உனக்கும்... ஏன்னா நீ ஒரு செண்டிமெண்டல் இடியட்... ஆனா நான் அப்படி இல்லே...!''

விஸ்வநாதன் மௌனமாயிருந்தான்.

''ஆனா நான் அப்படியில்லே... நீ சின்னப் பையனாயிருக்கிறதுலேருந்து பார்த்துட்டு வர்றேன்... உன்னப் பாக்காதப்ப பாக்கலியேன்னு மனசு தவிச்சதில்லே... பாக்குறப்ப அம்மாடின்னு நெஞ்சு கொள்ற சந்தோஷத்துல பிரமிச்சதில்லே...!''

அவள் பேசிக் கொண்டிருந்தாள்.

''உன்னைப் பார்க்கும்பொழுதெல்லாம் எனக்கு எவ்விதக் கிளர்ச்சியும் ஏற்படலை... இது தப்பா விசு?''

''தப்பில்லே ராதிகா!''

''கோபமா... விசு?''

''இல்லே... ஒப்பனா பேசறது எனக்குப் பிடிக்கும்....!''

''உனக்கு எப்படி?''

''நீதான் சொல்லிட்டியே.. எனக்குன்னு தனி அபிப்ராயம் கிடையாதுன்னு... ஆமாம் ராதிகா, நான் ஒரு செண்டிமெண்டல் இடியட்தான்...!''

''எனக்கு நிறைய எதிர்பார்ப்புகள் இருக்கு. நிறையப் படிக்கணும்...!''

''யாரையாவது விரும்பறியோ?''

# கோகுலம்




''ச்சே... யாருக்காகவோ உன்னைப் புறக்கணிக்கிறதா நினைக்காதே... இது வரைக்கும் யார் மீதும் பிடிப்பு விழலை.. கல்யாணம் என்றால் ஒரு பிடிப்பு, ஒரு படபடப்பு, ஒரு லயிப்பு ஏற்படணும். உன்னிடமும் வரவில்லை. எவனிடமும் இதுவரை வரவில்லை. எவனிடம் லயிக்கிறேனோ அவனைக் கல்யாணம் பண்ணிக்கறேன்.. அதுவரை படிக்கணும் விசு...!''

விஸ்வநாதன் உள்ளுக்குள் யோசித்தான்.

ராதிகா! நீ வித்தியாசமானவள்.

இதை ஆறு மாதம் முன்பு சொல்லியிருக்கலாம்.

என் கண்மணியை இழந்து விட்டேனே!

''கோபமா விசு... என்னைப் புரிஞ்சுக்கோங்க.. நான் இல்லாம உங்களால வாழ முடியும் விசு...!''

'வசுமதி இல்லாமலேயே வாழப் போகிறேன் ராதிகா.'

''நான் அப்பாவிடம் பேசுகிறேன். நீங்க அம்மாகிட்டே பேசுங்க.. பழியை என் மேல் போடுங்க.. அதானே உண்மையும் கூட...!''

''மாமா... ரொம்ப நம்பிக்கை வச்சிருக்காரு ராதிகா...!''

''அவருக்காக நம் வாழ்க்கையைப் பாழ்படுத்திக்க வேண்டாம்.. உங்களுக்குப் பிடித்தவளை நீங்க பண்ணிக்கங்க... எனக்குப் பிடித்தவனை நான் தேடிக்கிறேன்..!''

அதற்கப்புறம் அவர்கள் பேசிக் கொள்ளவில்லை.

அம்மாவுக்கு முதலில் அழுகைதான் வந்தது.

''ராதிகாவா அப்படிச் சொன்னாள்?''

''ஆமாம்... அம்மா... அவள் விருப்பம் இதில் முக்கியமில்லையா?''

அம்மா நெடு நேரம் யோசித்தாள்.

''போகட்டும் விடு விசு... ராதிகா இல்லைன்னா என்ன உனக்கு ஆயிரம் பெண் கிடைப்பாள்...'' - அம்மா சமாதானப்படுத்தினாள்.

ஆயிரம் பெண் கிடைக்கலாம். ஆனால் வசுமதி கிடைக்க மாட்டாள்.

விஸ்வநாதனுக்கு அம்மாவிடம் சொல்லி அழ வேண்டும் போலிருந்தது.

# வீட்டுக்கு வீடு வாசற்படி;

கல்லூரிக்குப் போக வேண்டுமே என்ற அவசரத்தில் அள்ளி அள்ளிப் போட்டுக் கொண்டு, பஸ்ஸைப் பிடிக்க ஓட வேண்டாம்.

நேற்று வகுப்புக்கு 'கட்' அடித்தோமே, என்ன சொல்லிக் கொடுத்தார்களோ என்ற கவலை வேண்டாம்.

வீட்டில் இருந்தபடி படித்துப் பரீட்சை எழுதினாலே போதும்!

பேரன் முதல் தாத்தா வரை, பேத்தி முதல் பாட்டி வரை படித்துப் பட்டம் பெற முடியும்.

டிப்ளமாவோ, டிகிரியோ கைக்குக் கிடைத்து விடும்.



குழந்தைசாமி

எங்கே? யார் தருகிறார்கள்?

இந்திரா காந்தி திறந்த நிலைப் பல்கலைக் கழகம் தருகிறது. 'அப்படி என்றால் தில்லியில்தானே இருக்கும். நமக்கென்ன பயன்?' என்று ஒதுங்கிப் போய் விட வேண்டாம்.

''தமிழ்நாட்டில் மட்டும் பதினைந்து ஸ்டடி சென்டர்கள் இருக்கின்றன. தவிர பாண்டிச்சேரியில் ஒன்று. அந்தமான் தீவுகளில் ஒன்று!'' என்கிறார் இந்தப் பல்கலைக் கழகத்தின் மண்டல இயக்குநர் டாக்டர் ஸ்ரீராம் சீனிவாசன்.

''ஸ்டடி சென்டர்களா? அப்படி என்றால்?''

''விடுமுறை நாட்களிலும், சனி - ஞாயிற்றுக் கிழமைகளிலும் இங்கே பேராசிரியர்கள் வருவார்கள். ஆலோசனை தருவார்கள். இவர்கள் எல்லாம் அனுபவம் வாய்ந்தவர்கள். இந்தக் கல்விப் பயிற்சிக்கென்றே ஸ்பெஷலாக அவர்களைத் தயார் செய்திருக்கிறோம்,'' என்றார் துணை இயக்குநர் சீனிவாசன்.

மற்ற பல்கலைக் கழகப் பாடப் புத்தகங்களை அந்தந்த வட்டாரத்தைச் சேர்ந்த பேராசிரியர்கள் எழுதுகிறார்கள். இந்தப் பல்கலைக் கழகத்தைப் பொறுத்தவரை, இந்தியா முழுதும் உள்ள கல்வி நிபுணர்களை அழைத்து, அந்தந்தத் துறைக்கான பாடங்களைத் தயாரிக்கச் சொல்லுகிறார்கள். அதனால் மிகச் சிறந்த கல்வி நிபுணர்களின் பங்கு இங்கே பயன்படுத்திக் கொள்ளப்படுகிறது.

கல்லூரி வகுப்புகளில் ஆசிரியருக்கும் மாணவருக்கும் இருக்கிற, கற்றுக் கொடுக்கிறவர் - கற்றுக் கொள்ளுகிறவர் என்ற முறையிலான உறவை, இந்தப் புத்தகங்களைப் படிக்கும்போதே உணர முடிகிறது. எதிரே நின்று ஆசிரியர் பாடம் எடுக்கிற மாதிரி உணர்வை ஏற்படுத்துகிறது. ஆனால், அதே சமயத்தில் மாணவரையும் சிந்திக்கத் தூண்டுகிறது.

ஸ்டடி சென்டர்களில் மாணவ - மாணவியருக்கு ஆலோசனை அளிக்கும் பேராசிரியர்களுக்கும் அவ்வப்போது சிறப்புப் பயிற்சி கொடுக்கப்படுகிறது. என்றைக்கோ தாங்கள் படித்ததை வைத்துக் கொண்டு, அவர்கள் பாடம் நடத்த வேண்டியதில்லை.

ஸ்டடி சென்டர்கள் நவீனமானவை. ஆடியோ, வீடியோ காசெட்டுகள் நூற்றுக் கணக்கில் இருக்கின்றன. பிரமாதமான லைப்ரரி உண்டு.

''தானாகக் கற்க முடியும் என்ற நம்பிக்கையைப் படிக்கிறவர்கள் மனத்தில் உருவாக்க வேண்டும் என்ற குறிக்கோளுடன்தான் ஆரம்பித்தோம். அதில் வெற்றியும் அடைந்திருக்கிறோம்!'' என்கிறார் டாக்டர் சீனிவாசன்.

''லாபரெடரிகளுக்கு என்ன செய்வீர்கள்?''

''இங்கே சென்னை புதுக் கல்லூரி ஒரு ஸ்டடி சென்டர். அங்கே இருக்கிற லாபரெடரியைப் பயன்படுத்திக் கொள்ளுகிறோம். அதன் முதல்வர் இக்கல்வித் திட்டத்தில் ஒருங்கிணைப்பாளர். அங்குள்ள பேராசிரியர்கள் சிலர் இந்த ஸ்டடி சென்டர்களில், வகுப்புகள் எடுக்கிறார்கள். ஆக, லாபரெடரி சும்மா இருக்கிற போது அதைப் பயன்படுத்திக் கொள்ளும் வசதி இருக்கிறது. அதே போல இந்தப் பேராசிரியர்களுக்கும் கூடுதல் வருமானம் கிடைக்கும் வாய்ப்பும் இருக்கிறது.

இதே போல இஞ்சினியரிங் கல்வி துவக்கப்படும் போது, இஞ்சினியரிங் கல்லூரி ஒன்றிலோ, அல்லது பயிற்சி நடத்தப் பொருத்தமான மிகச் சிறந்த தொழிற்சாலையிலோ ஆலோசனை வகுப்புகள் எடுக்கப்படுமாம்.

# வாசற்படிதோறும் பட்டதாரி!

உணவு மற்றும் ஊட்டச்சத்துச் சான்றிதழ்க் கல்வி பயில ஏராளமான பேர் ஆர்வம் காட்டி வருகின்றனர். ஆறே மாதப் பயிற்சி. கட்டணமும் இருநூறு ரூபாய்தான்!

அப்படிப் பார்த்தால், பொதுவாகவே இந்திரா காந்தி திறந்த நிலைப் பல்கலைக் கழகத்தில் கட்டணங்கள் எல்லாமே (அரசு மானியம் பெற்றதன் காரணமாக) மிகக் குறைவாகவே இருக்கிறது. வெளியே பத்தாயிரம் ரூபாய் செலவழித்துப் படிக்கும் கம்ப்யூட்டர் இஞ்சினீயரிங்கை, பாட நூல்களுடன் சேர்த்து இரண்டாயிரம் ரூபாய்க்குள்ளேயே முடித்து விடலாம் இங்கே.

''அதற்கென்று தரம் குறைவாக இருக்கும் என்று நினைக்காதீர்கள்! அதில் குறையே காண முடியாது!'' என்கிறார் சீனிவாசன்.

இப்போது மிகப் பிரபலமாகி இருப்பது நிர்வாக இயல் துறை எனப்படும் எம். பி.ஏ. ''வந்த விண்ணப்ப பாரங்கள் அத்தனையும் தீர்ந்து விட்டன. அத்தனை டிமாண்ட்!'' மொத்தம் 21 பேப்பர்கள். ஆனால் 'எனக்கு எல்லாமே எழுத விருப்பமில்லை. ஐந்து, ஆறு பேப்பர்கள் எழுத மட்டுமே விருப்பம்!' என்றால் அவற்றை மட்டும் எழுதித் தேர்வு பெற்று, டிப்ளமோ பெற்றுக் கொள்ளும் சுதந்தரம் உண்டு. ஒரு கோர்ஸ் மட்டும் தேறி சர்ட்டிபிகேட் பெற்றுக் கொள்ளவும் வசதி இருக்கிறது!


பேராசிரியர்களுக்குப் பயிற்சி வகுப்பு

ஏழாவது, எட்டாவது வரைக்குமே படித்தவர் கூட, பி.ஏ., பி.எஸ்ஸி., டிகிரி பெற முடியும். முதல் ஆறு மாதம் 'பிரிபரேட்ரி' எனப்படும் முறையில் அவரைத் தயார் செய்யப் பயிற்சி அளிக்கப்படுகிறது. பிறகு அவரும் பிற மாணவர் போல ரெகுலர் பி.ஏ., பி.எஸ்ஸி. பாடங்களைப் பெற்றுக் கொள்ளலாம்.

இரண்டு வருடம் கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கும் போது, திருமணம் ஆகி, பாதியில் படிப்பை விட்ட பெண்மணி ஒருவர், ''என் இரண்டு வருடப் படிப்பும் வீணாகி விடாமல் நான் மேற்கொண்டு ஓர் ஆண்டு படித்து, டிகிரி பெற முடியாதா?'' என்று கேட்கிறார்.

பாண்டிச்சேரி பல்கலைக் கழகத்துடன் சமீபத்தில் கையெழுத்தாகியுள்ள ஒப்பந்தப்படி, இது சாத்தியமாகும். இது போல கிரெடிட் டிரான்ஸ்பர் வசதியை, பிற பல்கலைக் கழகங்களுடனும் செய்து தர, இ.கா.தே.தி. பல்கலைக் கழகம் முயற்சிகள் எடுத்து வருகிறது.

வீட்டிலிருந்தபடி 'ரிலாக்ஸ்ட்' ஆக, விருப்பப்பட்ட கல்வியைக் கற்கும் இந்த வசதியை உருவாக்க யார் காரணம்?

1982ல், ஆந்திர பிரதேச திறந்த நிலைப் பல்கலைக் கழகத்தை உருவாக்கிய பேராசிரியர் டாக்டர் ராம் ரெட்டிதான். இவரே தான் பிறகு 1985ல் இ. கா. தே. தி. பல்கலைக் கழகம் தொடங்கப்பட்ட போது, முதல் துணைவேந்தராக நியமிக்கப்பட்டார். இவரது ஆற்றல் காரணமாக, பிறகு வான்கூவரில் உள்ள 'காமன்வெல்த் ஆஃப் லேர்னிங்' அமைப்பின் துணைத் தலைவராக ஆனார். தற்போது யூ. ஜி. ஸி. தலைவர் இவர்தான்.

இந்திரா காந்தி தேசிய திறந்த நிலைப் பல்கலைக் கழகத்தில் தற்போது 1,45,000 பேர் கல்வி பயிலுகிறார்கள். ''ஆனால் இதில் பெரும்பான்மையானவர்கள் வடக்கேயும், மேற்கேயும் இருப்பவர்தாம். தமிழ் நாட்டில் மட்டும் 7,000 பேர் பயிலுகிறார்கள். இப்போதுதான் இங்கே இதன் தாக்கம் உணரப்படுகிறது!'' என்கிறார் சீனிவாசன்.

''தற்போதைய துணைவேந்தர் குழந்தைசாமி அண்ணா பல்கலைக் கழகத் துணைவேந்தராயிருந்து, அதை உலகப் பல்கலைக் கழகங்களுக்கு ஈடாக உயர்த்திய பெருமை பெற்றவர். ''அவர் வந்த பிறகு எந்த விதத்தில் உங்கள் பல்கலைக் கழகம் விரிவடைந்திருக்கிறது?''

''ஸ்டடி சென்டர்கள் இரு மடங்கு ஆகியிருக்கின்றன. நம்முடைய பயிற்சித் திட்டங்களை மொரீஷஸ் நாட்டுப் பல்கலைக் கழகத்திலும் பயன்படுத்த ஒப்பந்தம் ஆகியிருக்கிறது. வரும் ஆண்டுகளில் இஞ்சினீயரிங், பி.எஸ்ஸி. (நர்ஸிங்) பயிற்சிகள் உருவாகப் போகின்றன. இஞ்சினீயரிங் துறையில் நீர்வள நிர்வாகமும் கட்டாயம் இருக்கும். அதுதானே குழந்தைசாமி ஸ்பெஷாலிடி! இன்றைய அத்தியாவசியத் தேவை!''

– எஸ். வி. என்.

சௌந்திரராஜன் காப்பி குடித்துக் கொண்டிருக்கும்போது பர்சோனல் டிபார்ட்மெண்டிலிருந்து அந்த வெள்ளைத்தாள் வந்தது. கம்ப்யூட்டர் எழுத்துக்களில்... தூய ஆங்கிலத்தில்.....

''கடந்த மூன்று நாட்களாக நம் நிறுவன சிற்றுண்டிசாலைக்கருகே உள்ள இரண்டு கம்பங்களிலும் மின் விளக்கு எரியவில்லை. இது இரவு நேர ஷிஃப்டில் வேலை செய்பவர்களை பாதிக்கிறது. எனவே, உடனே நடவடிக்கை எடுக்குமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்...''

'மிக அவசரம்' என எழுதிக் கீழே கையெழுத்திட்டிருந்தார் எம்.டி.

பல்பு போட்டு நெடுநாட்களாகி விட்டது. எனவே ஃப்யூஸ் ஆகியிருக்கலாம் என எண்ணிக் கொண்டார் சௌந்திரராஜன்.

அது காங்கிரீட்டில் விதவிதமான டிசைன்களில் 'டைல்ஸ்' தயாரிக்கும் ஒரு

# தனி ஒருவனுக்கு டிஃபனில்லையெனில்...

பொதுத்துறை நிறுவனம். அனைத்துமே அயல் நாட்டு ஏற்றுமதி. ஒரு ஷிஃப்டிலேயே கிட்டத்தட்ட ஐந்நூறு பேர் பணியாற்றுவார்கள். இதில் நூறு பேருக்கு மேல் நிரந்தர ஊழியர்கள். சௌந்திரராஜன் எலெக்ட்ரிகல் டிபார்ட்மெண்ட் டெபுடி மானேஜர். மானேஜர் பதவிக்கான பதவி உயர்வு கண்ணில் பூச்சி காட்டிக் கொண்டிருந்தது.

சௌந்திரராஜன் அவசரம் அவசரமாக மாதவனைக் கூப்பிட்டார்.

''மாதவன் லீவ் சார் இன்னிக்கி...''

''பூபதி...?''

''ஆன் டியூட்டி! டவுன் வரை போயிருக்கார்...''

தான் மட்டும்தான் அன்று எல்லா வேலைகளையும் பார்க்க வேண்டும் என்பது அப்போதுதான் உறைத்தது. இருந்தாலும் பயமில்லை. இருபத்து மூன்று வருட அனுபவம் கையிலிருக்கிறது.

நாகராஜனைக் கூப்பிட்டார்.

''இன்னிக்கி சூபர்வைசர் ரெண்டு பேருமே வரலை.... கேண்டீனுக்குப் பக்கத்தில ரெண்டு போஸ்ட்ல லைட் எரியலையாம். ஸ்டோர்ல போய் பல்பு வாங்கிக்க... மத்தியானத்துக்குள்ள போட்டுட்டு வந்துரு.... எம். டி. அர்ஜெண்டுன்னு சொல்லியிருக்கார்....''

''யாருக்கு அர்ஜெண்டுன்னா என்ன? என்ன செய்யணும்னு சொல்லுங்க!'' என்றான் நாகராஜ்.

''இங்க பாருப்பா! நீயோ பர்மனென்ட் வொர்க்கர்... கொஞ்சம் அட்ஜஸ்ட் பண்ணி வொர்க் பண்ணினா 'இன்கிரிமென்ட்', 'இன்சென்டிவ்' அப்படி இப்படின்னு நாலு காசு பார்க்கலாம். இதெல்லாம் எதுக்குச் சொல்றேன்னா....''

''இத பாருங்க சார்! இப்ப என்ன பண்ணணும்! அத மட்டும் சொல்லுங்க.''

''ரெண்டு போஸ்ட்லயும் பல்பு போடணும்...''

''முடியாது'' என்றான் அழுத்தமாய்.

''என்னது?''

''முடியாது'' என்றான், மறுபடி.

''என் ஒரு ஆளால் முடியற காரியமில்ல.... இன்னும் ரெண்டு ஆள் வேணும்...''

''ரெண்டு பல்பு போட மூணு ஆளா....''

''ஆமா! வேணும் தான். ஏணி யார் பிடிக்கறது... பல்பு யார் வெக்கக்கறது...''

சௌந்திரராஜனுக்கு இவன் இடக்கு மடக்காகப் பேசுவது ஏனென்று தெரியும். யூனியன் லீடர் இவன் மாமன். அக்கா புருஷன். அந்தத் துணிச்சல்.

''சரி! கூப்டுக்க போ!'' என்றார் சாந்தமாய்.

கொஞ்ச தூரம் சென்றவன் திரும்ப வந்தான். ''ஏணி?'' என்றான் ஒற்றையாய்.

''கோடௌன்ல இருக்கும் எடுத்துக்கப்பா....''

''சரி! யார் தூக்கிட்டுப் போறது கேண்டீன் வரை....''

''அதான் ரெண்டு ஆள் கூப்டுக்கச் சொன்னனே?''

''அவங்களும் என்ன மாதிரி பெர்மனெண்ட் ஆனவங்கதான். தூக்க மாட்டாங்க....''

''சரி! என்ன செய்யலாம்..?''

''என்னக் கேட்டா எப்படி... யாராவது கேஷுவல் லேபர்ஸை அனுப்பி வைங்க....''

''என்ன பேசற நீ.. வர்ற முப்பதுக்குள்ள எக்ஸ்போர்ட் போயாகணும்.. எல்லா கேஷுவல்ஸும் புரொடக்ஷன்ல

திருவையாறு பாலுசாமி



இருக்காங்க. கொஞ்சம் அட்ஜஸ்ட் பண்ணி நீங்களே தூக்கக் கூடாதா....''

ஒன்றும் பேசாமல் நடந்தவன், ''பல்பு போடணும்னா ஏணி அனுப்பி வைங்க...'' என்றான். போய்விட்டான்.

சௌந்திரராஜன் யோசித்தார்.

**நா**கராஜ"ம் மற்ற இருவரும் பல்பு போட வேண்டிய கம்பங்களைப் பார்வை யிட்டனர். பின் மெல்ல அருகே உள்ள மாமரத்தடியில் அமர்ந்தனர். நாகராஜ் பாக் கெட்டிலிருந்து பீடியை உருவினான். பற்ற வைத்து ஆழமாய் இழுத்துப் புகை விட்டான்.

''இனிய பொழுது மாமரத்தடிதான் நமக்கு... இமும் எங்க ஏணி அனுப்பப் போவுது....'' என்றான். மற்ற இருவரும் சிரித்தனர்.

அரைமணி மெல்ல ஊர்ந்தது. பதினொன்றரை ஆகிவிட்டது. மாமரக்காற்று, சில்லென்று கண்களை மூடியது. நாகராஜ் மெல்ல மாமரவேரில் சாய்ந்தான்.

''நாகராஜ்! அங்க பாரு!'' கூவினான் ஒருவன்.

சௌந்திரராஜன் வந்து கொண்டிருந்தார். தோளில் ஏணி. இருபத்து மூன்று வருட அனுபவம் ஏணி தூக்கிக் கொண்டு மூச்சிரைத்துக் கொண்டு வந்து கொண்டிருந்தது.

பார்க்காதது மாதிரி திரும்பிக் கொண்டிருந்த நாகராஜ், அவர் அருகில் வந்தவுடன் ஓடிப்போய்.... ''அடடா! என்ன சார் இது. நீங்க போயி இதெல்லாம் தூக்கிட்டு... இப்படித் தெரிஞ்சிருந்தா நாங்களே தூக்கிக்கிட்டு வந்துருப்பமே...'' என்றான்.

''சரி! அத விடு... பல்பு இருக்கில்லை....?'' என்றார்.

''ஆமாம்! பல்பு...'' என்று அப்போது தான் நினைவு கூர்ந்தான் ஒருவன்.

''அடடா!'' என்ற நாகராஜ், ''நாங்க வாங்கிக்கிறோம் சார் ஸ்டோர்ல!'' என்றான்.

''என்னப்பா வேலை செய்றீங்க! சீக்கிரம் முடிங்க...'' என்று கிளம்பிய வரிடம், ''என்ன இருந்தாலும் நீங்க ஏணி யெல்லாம் தூக்கிட்டு வந்திருக்கக் கூடாது சார்....'' என்றான் நாகராஜ், துக்கமாக.

அவரும் போகிறபோக்கில், ''என்ன பண்றது. என் தலையெழுத்து...'' என்றார்.

**ம**ணி பன்னிரெண்டு.

''சுந்தரம்! நான் போய் ஸ்டோர்ல பல்பு வாங்கிட்டு வர்றேன்.... இருங்க....'' என்ற

நாகராஜ் ஸ்டோருக்குச் சென்று, ''பல்பு ரெண்டு வேணுமே?'' என்றான்.

''எதுக்கு?''

''கேண்டீன் பக்கத்துல...'' என்று கதையைச் சொன்னான்.

''இந்தா இஷ்யூ டிக்கெட்... இதை ஃபில்லப் பண்ணி 'வொர்க்ஸ் மானேஜர்' கிட்ட கையெழுத்து வாங்கிட்டு வா! தரேன்...''

''போக்கடா!''

'இரண்டு பல்பு' என்று எழுதிக் கொண்டு 'வொர்க்ஸ் மானேஜரிடம் போனான்.

''கான்ஃபரன்ஸ் ஹால்ல இருக்கார், சைனாவேர்ந்து வந்திருக்காங்க. மீட்டிங் நடந்திட்டிருக்குது. ஒரு மணிக்கு வா!'' என்றான் பி.ஏ.

ஓரமாய் நாற்காலியில் உட்கார்ந்தான். காத்திருந்தான்.

மணி ஒன்று.

வயிறு பசித்தது. மாமரத்தடிக்கு நடந்தான். மற்ற இருவரும் 'முதல் நாள் செகண்ட் ஷோ' பற்றிக் காரசாரமாய் விவாதித்துக் கொண்டிருந்தனர்.

''வாங்க சாப்பிட்டு வந்துறலாம். அவர் மீட்டிங்ல இருக்கார். சாப்டுட்டுக் கையெழுத்து வாங்கிடலாம்....''

கேண்டீன் நோக்கி நடந்தான்.

''என்னப்பா ஆச்சு?'' என்றார் சௌந்திரராஜன்.

''இஷ்யூ டிக்கெட் போடலை இன்னும். 'வொர்க்ஸ் மானேஜர்' மீட்டிங்ல இருக்கார். கையெழுத்து வாங்கணும்.....'' என்றான். பின், ''போட்றலாம் சார்! கவலைப் படாதீங்க!'' என்றான்.

சாப்பிட்டு விட்டு வொர்க்ஸ் மானேஜரிடம் போனான். அவர் 'இஷ்யூ டிக்கெட்'டில் சில எழுத்துப் பிழைகளைத் திருத்தி விட்டுக் கையெழுத்துப் போட்டார்.

வரும் வழியில் சின்னையனைப் பார்த்தான்.

''மீட்டிங் இருக்கு மாமு ஒன்னரைக்கு. யூனியன் விஷயமாச் சில முக்கியமான விஷயம் பேசணும்... அங்க இங்க சுத்தாம வந்து சேரு....'' என்றான் சின்னையன்.

மாமரத்தடி.

''யூனியன் மீட்டிங்காம். போயிட்டு வந்துறலாம். வாங்க... அரை மணியில முடிஞ்சுடும்.....''

''பல்பு போட்டுட்டுப் போயிறலாமே?...''

''அட வாங்கப்பா.....''

''அவரு கேட்டா என்ன சொல்றது?''

''எல்லாம் நாஞ் சொல்லிக்கறேன்....''

**மீ**ட்டிங் காரசாரமாக இருந்தது. எல்லோரும் வலியுறுத்திக் கொஞ்சமும், கட்டிக்காட்டிக் கொஞ்சமும் பேசி, வாய்ப் பளித்ததற்கு நன்றி கூறி விடைபெற்ற போது நாகராஜுக்கு பல்பு ஞாபகம் வந்தது.

அவசரமாய் மாமரத்தடி போய் ஆரம்ப கட்ட முயற்சிகளைச் செய்தனர். நாகராஜ் பல்பு வாங்கிய கவரை பிரித்தான்.

''என்ன பஜ்ஜி வாசனை மாதிரி தெரி யுது?'' என்றான்.

''டிஃபன்.....''

''மணியாச்சா?'' வாட்சைப் பார்த்தான்.

''அய்யய்யோ! மூணரை.....''

''நீங்க ரெண்டு பேருமாப் போட்டுக் கிட்டிருங்க... நான் போய் ரெண்டு பஜ்ஜிய தின்னுட்டு வந்துர்றேன். தப்பா நினைச் சுக்காதீங்க... வந்துர்றேன் அஞ்சு நிமிஷத் துல....''

**கே**ண்டீனில் கூட்டமில்லை. களைப் பாய் பெஞ்சில் உட்கார்ந்தான்.

''பஜ்ஜி குடுப்பா....''

''தீர்ந்து போச்சு!'' என்றான் ஒருவன், உள்ளிருந்து.

''தீர்ந்து போச்சா? மணி மூணரைதானே ஆகுது....''

''இன்னிக்கி இடீர்னு கான்ஃபரன்ஸ் அரேஞ்ஜ் பண்ணதால பத்தாம போயி ருச்சி....'' என்றான் கோபால். கேண்டீன் சூபர்வைசர்.

''கான்ஃபரன்ஸுன்னா எங்களுக்கு பஜ்ஜி கிடையாதா? இத மாதிரி டெய்லி மீட்டிங் போடுவாங்க... நாங்க வயிறு காய ணுமா? இப்ப என்ன பண்ணுவீங்களோ தெரியாது... எனக்கு டிஃபன் வேணும்....''

''கொஞ்சம் புரிஞ்சு பேசு நாகராஜ். நாங்க என்ன பண்ண முடியும்.... சில சமயம் அப்படி இப்படித்தான் இருக்கும்!''

''முதல்ல 'அக்ரிமெண்ட்' தெரியுமா உங்களுக்கு? ரெண்டு பஜ்ஜி ஒரு டீ குடுத்தே ஆகணும். இதக் கூட குடுக்காம நாள் பூரா உழைக்கிற தொழிலாளி வயித்துலே அடிக் காதீங்க.... அது நல்லதில்ல....''

''நீங்க உழைச்சதத்தான் இங்கிருந்து பாத்தமே காலையிலிருந்து....'' என்றான் கோபால் முணுமுணுப்பாக.

''என்னது... அதக் கேட்க நீ யாரு? எங்களைக் கேட்க ஆளிருக்கு... உங்க வேலையைப் பாருங்க நீங்க....''

''அதத்தான் பாத்துக்கிட்டிருக்கோம்... நீங்க போங்க வெளியே...'' என்றான் நக்க லாய்.

நாகராஜுக்கு எங்கேயோ ரத்தம் கொதித்தது. தடாலென்று கீழே இறங்கி னான்.

''யாரைப் பாத்து வெளியே போடான்னே.....''

''உன்னப் பாத்துத்தான்டா...'' என்றான் கோபால், கோபமாய்.

''டேய்!....'' என்று பாய்ந்த நாகராஜனை அவன் சகாக்கள் ஒதுக்கித் தள்ளிக் கொண்டு போய்.... 'அவனைப் பார்க்கிற விதத்தில பார்த்துக்கலாம், விடு....' என்று சமாதானப்படுத்தினர்.

அதன்பின் எல்லாம் வாயுவேகம். நாகராஜ் யூனியன் லீடரைப் பார்த்து விஷயம் சொல்ல உடனே யூனியன் கூடியது. ''இத விடக்கூடாது தலைவா....''

'பர்சோனல்' மானேஜர் வரவழைக்கப்பட்டார். கோபாலை நிறுத்திக் கேள்விகள் கேட்டனர்.

பின், ''மன்னிப்புக் கேட்கணும்..?'' என்றனர்.

''எதுக்கு?'' என்றான் கோபால்.

''டிஃபன் குடுக்காதது ஒண்ணு. நாகராஜனைத் திட்டினது ஒண்ணு...''

''நான் திட்டினேனா?''

''ஆமாம்!'' என்றான் நாகராஜ். ''இதோ எல்லாரும் சாட்சி....''

''முடியாது....'' என்றான் கோபால்.

மானேஜர் கோபாலைப் பார்த்தார். நடந்ததை விவரித்தான்.

''இந்த மாதிரி அசிங்கத்துக்கெல்லாம் நான் மன்னிப்புக் கேட்க முடியாது....''

மானேஜர் சமாதானப்படுத்தினார். 'மன்னிப்பு' என்ற வார்த்தையிலேயே ஜென்ம சாபல்யம் பெறுபவர்கள் போல் காத்திருந்தனர். வாதாடினர். கோபாலைப் பற்றி மானேஜருக்கு ஓரளவு தெரியும்.



பழம்பெரும் எழுத்தாளர்களின் கருத்துப் புதையல்கள்!

**வண்ணமடல்கள் :**

விளையாட்டுத் துறை, சினிமா, சங்கீதம், நடனம் என்று பல தரப்பிலும் சிகரத்தில் உள்ளோரின் வண்ணப்படங்கள்.

**பெரியோரைப் போற்றுவோம் :**

காஞ்சிப் பெரியவர்கள், சத்திய சாயி பாபா, பாரத ஜனாதிபதி, ராஜாஜி, டி.கே.சி., ''கல்கி'', சதாசிவம் - எம். எஸ். தம்பதி என்று பலரது பல வண்ணப் படங்கள்.

**பயணம் செய்வோம் :**

பாவிதானாவின் கோவில் கலை அழகுகளை இன்றைக்கெல்லாம் பார்க்கலாம். காவேரி நிலர்கதாமாவின் இயற்கை எழில்களைக் காணக் கண்கொட்டவும் மனம் வராது!

**பக்திக்கரம் குவிப்போம் :**

வயலூர் முருகனின் சந்நிதித் தோற்றம், தனுகவின் ஓவியத் திறவில் தகதகத்து அருள் சுரக்கிறது!

**எழில்மிகு ஓவியங்கள் :**

மணியம், சந்திரா, கனுதேசாய் போன்ற ஓவிய மேதைகளின் ஆற்றலுடன் இன்றைய வினு, எஸ். ராஜம், ம. செ., உமாபதி, கோபுலு ஆகியோரின் கைத் திறன்கள் போட்டியிடுகின்றன.

**ஆகஸ்டு 1உ பொன் விழா மேடையில் வெளியிடப்படுகிறது.**

உங்கள் பிரதிக்கு உடனே உள்ளூர் ஏஜெண்டிடம் பதிவு செய்து கொள்ளவும். அல்லது கல்கி காரியாலயத்துக்கு எழுதவும்.

*விலை ரூ 50/- ரிஜிஸ்தர் தபால் செலவு ரூ. 8/=*

தாமதமின்றிச் செயல்பட்டால் ஏமாற்றத்தைத் தவிர்க்கலாம்.

**மானேஜர், கல்கி, கிண்டி, சென்னை - 600 032**

''கேட்கலேன்னா நடக்கறதே வேற....''

மானேஜர் முகத்தில் கோபம் தெரிந்தது. ''என்ன பண்ணுவீங்க....?''

''ஸ்டிரைக்....!''

''பண்ணிக்கோ!'' என்றார் வெறுத்துப் போய். எழுந்து போய் விட்டார்.

**நா**லரை மணிக்கெல்லாம் எம்.டிக்கு யூனியனிலிருந்து எழுதினர். ''கம்பெனிக்காக உழைக்கும் ஒரு தொழிலாளிக்கு வயிற்றுச் சோறு மறுத்த நிர்வாகத்தை நாங்கள் வன்மையாகக் கண்டிக்கிறோம். சம்பந்தப்பட்டவர்கள் மன்னிப்புக் கேட்க வேண்டும். அல்லது நிர்வாகம் இது குறித்துப் பேச்சுவார்த்தை நடத்த வேண்டும். இல்லையேல் வேலை நிறுத்தம் செய்வதைத் தவிர வேறு வழியில்லை....''

எம்.டி அவசரமாக, ''நாளைக்குப் பேச்சு வார்த்தை...'' என்றார்.

பேச்சுவார்த்தை முடியும் வரை தொழிலாளர்கள் வேலை செய்ய மாட்டார்கள் என யூனியன் அறிவித்தது. இரவோடிரவாக பழைய பேனர், தட்டிகள் தூசி தட்டப்பட்டு ஜதா கலரில் புதுசாக எழுதத் தொடங்கினர். எல்லோரும் மறுநாளுக்காகக் காத்திருக்க -

மாமரத்தின் நிழலில், சிலுசிலுவெனக் காற்றிலே, அதன் வேர் ஓரமாய் எதைப் பற்றியும் கவலையில்லாமல் அந்த இரண்டு பல்புகளும் சுகமாகத் தூங்கிக் கொண்டிருந்தன.



# பாலம்

●● ''சோமலெ'' எழுதிய ''விவசாய முதலமைச்சர்'' புத்தகம் தேவைப்படுகிறது. வேதாரண்யம், கஸ்தூர்பா கன்யா குருகுலம் வெளியீடு. பழைய புத்தகமானாலும் பேத மில்லை. எதிர்பார்க்கும் விலை, அஞ்சல் செலவு குறிப்பிட்டு எழுதவும்.

– எஸ். வேலுசாமி,
47, நேதாஜி ரோடு,
பொள்ளாச்சி – 642 001.

●● கருக்கு எழுத்தாளர் - தட்டச்சு அடிப்பவர் தேவை. தாமே கடிதப் போக்கு வரத்து செய்யக் கூடிய ஆற்றல் இருப்பின் நலம். திறமையும் ஆர்வமும் உழைப்பும் உடைய விற்பனைப் பிரதிநிதிகள் இருவர் தேவை. மாவட்டத் தலைநகர்களில் பிரதி நிதிகளும் தேவை.

– ரா. வித்யாசங்கர்,
ஸ்ரீ மாதங்கி எண்டர்பிரைசஸ்,
13, ஆண்டர்சன் தெரு,
சென்னை – 600 001.

●● தமிழக தென் மாவட்டங்களில் சுற்றுலா அல்லது புனிதத் தலங்களுக்குத் தனியாகவோ அல்லது குடும்பத்துடனோ செல்ல விரும்புவோருக்கு வழி காட்டியாக இருப்பதுடன், ரயில், பேருந்து, விமான முன்பதிவுகளைச் செய்து, தங்குமிடங்கள், தனியார் ஊர்திகள் போன்றவையும் என் னால் ஏற்பாடு செய்து தர முடியும்.

– க. சண்முக வேலு,
SLL II 378, அண்ணாநகர்,
மதுரை – 625 020.

●● சடங்குகள் பல ஆழ்ந்த உட் பொருள் கொண்டவை. அவற்றைப் பற்றி ஆராய்ந்து அறிந்து கொள்ள நினைக்கி றேன். நமது நாட்டின் பலதரப்பட்ட மக்களின் சடங்குகள் குறித்து (பிறப்பு முதல் இறப்பு வரை) தெரிந்த விவரங்களை யெல்லாம் கொடுத்து உதவ வேண்டுகி றேன். புத்தகங்கள், கட்டுரைகள் இருப் பினும் அனுப்பலாம்.

– எஸ். ராமரத்னம்,
B- 29, லஸ் சர்ச் ரோடு,
சென்னை – 600 004.

●● நீதித்துறையில் பணியாற்றி ஓய்வு பெற்ற நான், கண் பார்வையற்ற வர்களுக்குப் பாடம் - புத்தகம் படித்துக் காட்ட விரும்புகிறேன். கோவையைச் சேர்ந்த பார்வையற்றவர்கள் அல்லது பார் வையற்றோர் ஒன்றுக்குப் பாடுபடும் சங்கங்கள் தொடர்பு கொள்ள முகவரி :

– எஸ். கணபதி,
B-10, ஹட்கோ காலனி,
பீளமேடு, கோவை – 641 004.

●● சுமார் ஐம்பது வருஷங்களுக்கு முன் 'ஃபிளை பேப்பர்' என்று அயல் நாட்டிலிருந்து வந்து கொண்டிருந்து. தற் போது இந்தியாவில் கிடைப்பதில்லை. ஒரு பக்கம் பிசின் போன்ற கலவை தடவியிருக்கும். ஈக்கள் அதன் கவர்ச்சி யைத் தவிர்க்க முடியாமல் வந்து அமர்ந்து சிக்கும். ஈக்கள் சிக்கிய தாளைத் தூக்கி எறிந்து விடலாம். அந்தப் பிசின் வேலை செய்ய 'ஃபார்முலா' என்ன? தெரிந்தவர் கள் தொடர்பு கொள்ளவும். சன்மானம் உண்டு.

– கே. தக்ஷிணாமூர்த்தி,
IB சந்தோஷ் அபார்ட்மெண்ட்ஸ்,
2, பாம்குரோவ் சாலை,
பெங்களூர் – 560 047.

●● பெண்கள் விசேஷ தினங்களில் கைகளில் வரைந்து கொள்ளும் மருதாணி டிசைன்களை ஐம்பது டிசைன்கள் வரை - நான் வரைந்து வைத்திருக்கிறேன். தமிழகத் துக்குப் புதிய முயற்சி. ஆர்வமுள்ளோர் தொடர்பு கொள்ள முகவரி :

– திருமதி கலா தனபால்,
54, காதர்கான் தெரு,
சூரமங்கலம், சேலம் – 636 005.

●● ஸ்டீல் ரோலிங் மில் மானேஜ ராக வடக்கே முப்பது வருஷ அனுபவம். தெற்கே - குறிப்பாக பெங்களூரில் - தக்க வாய்ப்புக்கு முயற்சி செய்கிறேன். குடும் பத்துடன் சேர்ந்திருக்கவே இந்த முயற்சி. என் பணியைப் பயன்படுத்திக் கொள்ளக் கூடிய தொழிலதிபர்கள் தொடர்பு கொள்ள வும்.

– வி. சங்கரன்,
''சசி இல்லம்'',
237, ஹனுமப்பாசாலை,
N. Thippasandra,
பெங்களூர் – 560 075.

பாலம் பகுதி மூலம் இணையும் வாசகர் களின் வெற்றி - தோல்விகளுக்குக் கல்கி நிறுவனம் பொறுப்பு ஏற்க இயலாது.

# சிவகாமியின் சபதம்

## பதினைந்தாம் அத்தியாயம்

## குலச்சிறையார்

சென்ற அத்தியாயத்தில் கூறியபடி மாமல்ல சக்கரவர்த்தி படையுடன் புறப்பட்டுச் சென்று மூன்று தினங்கள் ஆயின. காஞ்சி மாநகரத்தின் வீதிகள் வழக்கமான கலகலப்பு இல்லாமல் வெறிச்சென்று கிடந்தன. பட்டணமே தூங்கி வழிந்து கொண்டிருந்தது.

வழக்கத்துக்கு மாறான அந்தப் பகல் தூக்கத்தைக் கலைத்துக் கொண்டு காஞ்சி நகர் வீதிகளில் ஒரு ரதம் கடகடவென்ற சப்தத்துடன் அதிவேகமாகப் பிரயாணம் செய்து திருநாவுக்கரசர் மடத்தின் வாசலில் வந்து நின்றது. ரதத்தை ஓட்டி வந்தவன் வேறு யாருமில்லை. நம் பழைய நண்பன் கண்ணபிரான்தான்.

ரதத்திலிருந்து நாம் இதுவரையில் பார்த்திராத புது மனிதர் ஒருவர் - இளம் பிராயத்தினர் - இறங்கினார். சிறந்த பண்பாடு, முதிர்ந்த அறிவு, உயர் குடிப்பிறப்பு ஆகியவற்றினால் ஏற்பட்ட களை அவர் முகத்தில் ததும்பியது.

கீழே இறங்கியவரைப் பார்த்துக் கண்ணபிரான், ''ஆம், ஐயா! இதுதான் திருநாவுக்கரசரின் திருமடம். அதோ இருக்கும் பல்லக்கு புவன மகாதேவிக்கு உரியது. சக்கரவர்த்தியின் அன்னையார் சுவாமிகளைத் தரிசிக்க வந்திருக்கிறார் போல் தோன்றுகிறது'' என்றான்.

''யார் வந்திருந்தபோதிலும் சரி; தாமதிக்க நமக்கு நேரமில்லை'' என்று சொல்லிக் கொண்டு அந்தப் புது மனிதர் மடத்துக்குள்ளே நுழைந்தார்.

உள்ளே உண்மையாகவே புவனமகாதேவியார் தமது வளர்ப்புப் பெண்ணாக ஏற்றுக் கொண்ட மங்கையர்க்கரசியுடன் வாகீசப் பெருந்தகையைத் தரிசிப்பதற்காக வந்திருந்தார். சுவாமிகள் வடநாட்டில் தாம் தரிசனம் செய்து வந்த ஸ்தலங்களின் விசேஷங்களைப் பற்றிப் புவனமகாதேவிக்குச் சொல்லிக் கொண்டிருந்தார். எல்லாம் சொல்லி விட்டுக் கடைசியில் தாம் மீண்டும் தென்னாட்டு யாத்திரை கிளம்பப் போவது பற்றியும் நாவுக்கரசர் தெரிவித்தார்.

''ஆம், தாயே! வடநாட்டில் எத்தனையோ ஸ்தலங்களைத் தரிசனம் செய்தேன். கயிலையங்கிரி வரையில் சென்றிருந்தேன். எனினும், நமது தென்னாட்டிலேயுள்ள க்ஷேத்திரங்களின் மகிமை தனியானதுதான். நமது ஏகாம்பரநாதர் ஆலயத்துக்கு இணையான ஆலயம் வேறு எங்கும் இல்லை. நமது திருத்தில்லை, திருவையாறு, திருவானைக்கா முதலிய க்ஷேத்திரங்களுக்கு இணையான க்ஷேத்திரமும் வேறு எங்கும் கிடையாது. மறுபடியும் தென்னாடு சென்று அந்த ஸ்தலங்களையெல்லாம் மீண்டும் தரிசித்து விட்டு வர எண்ணியிருக்கிறேன். நாளைக்குப் புறப்படப் போகிறேன்!''

அமரர் கல்கி

இப்படி அவர் சொல்லிக் கொண்டிருந்த போது, மடத்தின் வாசலில் ரதத்திலிருந்து இறங்கிய இளைஞர் உள்ளே வந்தார்.

பயபக்தியுடன் சுவாமிக்கும் புவனமகா தேவிக்கும் வணக்கம் செலுத்தினார்.

''நீ யார் அப்பனே? எங்கு வந்தாய்?'' என்று நாவுக்கரசர் கேட்ட குரலில் சிறிது அதிருப்தி தொனித்தது.

அந்தக் குறிப்பைத் தெரிந்து கொண்ட இளைஞர் கைகூப்பி நின்றவண்ணம், ''சுவாமி! மன்னிக்க வேண்டும். சக்கரவர்த்தியின் அன்னையார் இவ்விடம் விஜயம் செய்திருப்பது தெரிந்தும் முக்கிய காரியத்தை முன்னிட்டுப் பிரவேசித்தேன். அடியேன் வராக நதிக்கரையிலிருந்து வருகிறேன். அங்கே நெடுமாற பாண்டியர் கடுமையான தாபஜ்வரத்தினால் பீடிக்கப்பட்டிருக்கிறார். வைத்தியர்களின் ஔஷதங்களினால் மட்டும் அவரைக் குணப்படுத்த முடியாதென்று கருதித் தங்களிடமிருந்து திருநீறு வாங்கிக் கொண்டு போக வந்தேன்; மன்னிக்க வேண்டும்'' என்று திருநாவுக்கரசரைப் பார்த்துக் கூறி விட்டுப் புவனமகாதேவியின் பக்கம் திரும்பி, ''தேவி! தாங்களும் க்ஷமிக்க வேண்டும்!'' என்றார்.

அப்போது தேவி, ''அப்பனே! நீ ரொம்ப விநயமுள்ளவனாயிருக்கிறாய். ஆனால், சுவாமிகள் முதலில் கேட்ட கேள்விக்கு நீ மறுமொழி சொல்லவில்லையே? நீ யார்?'' என்று கேட்க, ''பதற்றத்தினால் மறந்து விட்டேன், தேவி! பாண்டிய நாட்டில் மணமேற்குடி என்னும் கிராமத்தில் பிறந்தவன். என் பெயர் குலச்சிறை; படையுடன் கிளம்பிய பாண்டிய குமாரருக்கு ஓலை எழுதவும், படிக்கவும் உதவியாயிருக்குமாறு என்னை நியமித்து மதுரை மன்னர் அனுப்பி வைத்தார்!'' என்றான் அந்த இளைஞன்.

''நோய்ப்பட்ட பாண்டிய குமாரரை வராக நதிக்கரையில் ஏன் வைத்திருக்க வேண்டும்?'' என்று தேவி மீண்டும் கேட்டார்.

''ரொம்பக் கடுமையான ஜுரம், தேவி! இந்த நிலையில் அவர் பிரயாணம் செய்யக் கூடாது என்பது வைத்தியரின் அபிப்பிராயம். கொஞ்சம் குணப்பட்டதும் இவ்விடத்துக்கு அழைத்து வந்து விடுகிறோம். அரண்மனைக்கு வந்து செய்தி சொல்லி விட்டுப் போக எண்ணினேன்.



நல்ல வேளையாக இங்கேயே தங்களைச் சந்தித்தேன்.''

''அப்படியில்லை, அப்பா! என்னிடம் சொன்னால் மட்டும் போதாது. அரண்மனைக்கு வந்து வானமாதேவியிடமும் நேரில் சொல்லிவிட்டுத் திரும்பிப் போ! பாவம்! அவள் மிகக் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறாள்'' என்று புவனமகாதேவி சொல்லிக் கொண்டே எழுந்து, ''சுவாமி! போய் வருகிறேன். விடை கொடுங்கள்!'' என்றார்.

புவனமகாதேவியுடன் மங்கையர்க்கரசி எழுந்து சென்றாள். குலச்சிறை உள்ளே வந்தது முதல் அவனுடைய முகத்தை அடிக்கடி உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தவள் இப்போது வெளியேறு முன்னர் கடைசி முறையாக ஒரு தடவை பார்த்தாள். அப்போது குலச்சிறையும் அவளைப் பார்க்க நேர்ந்தது. இருவருடைய முகங்களிலும் கண்களிலும் ஏதோ பழைய ஞாபகத்தின் அறிகுறி தோன்றலாயிற்று.



பெண்ணரசிகள் இருவரும் போன பிறகு திருநாவுக்கரசர்,

''அப்பனே! எல்லாம் எனை ஆளும் எம்பெருமான் செயல்! அடியேனால் நடக்கக் கூடியது என்ன இருக்கிறது? என்றாலும் சிரித்துப் புரமெரித்த இறைவன் பெயரை உச்சரித்து இந்தத் திருநீற்றைக் கொடுக்கிறேன். எடுத்துக் கொண்டு போய் இடுங்கள். அடியேனுக்கு நேர்ந்திருந்த கொடிய சூலை நோயை ஒரு கணத்தில் மாயமாய் மறையச் செய்த வைத்தியநாதப் பெருமான், இளம் பாண்டியரின் நோயையும் குணப்படுத்தட்டும்'' என்றார்.

நாவுக்கரசர் அளித்த விபூதியைப் பயபக்தியுடன் வாங்கிப் பத்திரப்படுத்திக் கொண்ட குலச்சிறையார், மீண்டும், ''சுவாமி! அடியேனுக்கு இன்னொரு வரம் அருளவேண்டும்'' என்று பணிவுடன் கேட்டார்.

''கேள், தம்பி! உன்னுடைய பக்தி விநயம் என் மனத்தை ரொம்பவும் கவர்கிறது!'' என்றார் வாகீசர்.

''தென் பாண்டிய நாட்டில் சமணர்களின் ஆதிக்கம் அதிகமாகி வருகிறது. ஸ்வாமிகள் தங்கள் சிஷ்ய கோடிகளுடன் பாண்டிய நாட்டுக்கு விஜயம் செய்ய வேண்டும். விஜயம் செய்து, மக்களைச் சமணர் வலையில் விழாமல் தடுத்தாட் கொள்ள வேண்டும்! தமிழகத்தில் புராதன பாண்டிய வம்சத்தையும் சமணப் படுகுழியில் விழாமல் காப்பாற்ற வேண்டும்! ஆஹா! நல்ல மரத்தில் புல்லுருவி பாய்ந்ததுபோல், இந்தத் தமிழ்நாட்டில் சமணம் ஏன் வந்தது சுவாமி!'' என்று குலச்சிறை ஆவேசத்துடன் பேசிவந்தபோது நாவுக்கரசர் முகத்தில் புன்னகை தவழ்ந்தது. அந்தப் பெருந்தகையார் குலச்சிறையைக் கையமர்த்தி நிறுத்திக் கூறினார்: ''தம்பி! சமண மதத்தின் மீது ஒரு காலத்தில் நானும் இப்படிக் கோபம் கொண்டிருந்தேன். ஆனால், இந்தக் காலத்திலே ஒருசிலர் செய்யும் காரியங்களுக்காகச் சமண சமயத்தின் மேல் துவேஷம் கொள்ளுதல் நியாயமன்று. அன்பையும் ஜீவகாருண்யத்தையும் போதிப்பதற்கு ஏற்பட்ட சமயம் சமண சமயம். நமது செந்தமிழ் நாடு ஆதி காலத்துச் சமண முனிவர்களால் எவ்வளவோ நன்மைகளை அடைந்திருக்கிறது. சமண முனிவர்கள் தமிழ் மொழியை வளர்த்தார்கள். அரிய காவியங்களைத் தமிழில் புனைந்தார்கள். ஓவியக் கலையை நாடெங்கும் பரப்பினார்கள்.''

குலச்சிறை பொறுமை இழந்தவராய், ''போதும், சுவாமி! போதும்! தங்களிடம்

சமணர்களைப்பற்றிய புகழுன்ரகளைக் கேட்பேனென்று நான் எதிர்பார்க்க வில்லை. தொண்டை மண்டலத்தைச் சமணர்களிடமிருந்து காப்பாற்றிய தாங்கள் பாண்டிய நாட்டையும் காப்பாற்றியருள வேண்டும் என்று கேட்டுக் கொள்ள வந் தேன். அவர்கள் செய்யும் அட்டூழியங் களைத் தாங்கள் பாண்டிய நாட்டிற்கு வந்து பாருங்கள்!'' என்று பேசினார்.

நாவுக்கரசர் சற்றுநேரம் கண்களை மூடியவண்ணம் ஆலோசனையில் இருந் தார். பிறகு கண்களைத் திறந்து குலச்சிறை யைப் பார்த்துக் கூறினார்: ''மந்திர தந்தி ரங்களில் வல்லவர்களான சமணர்களுடன் போராடுவதற்குச் சக்தியோ விருப்பமோ தற்போது என்னிடம் இல்லை. ஆனால் கேள், தம்பி! என்னுடைய அகக்காட்சியில் ஓர் அற்புதத்தை அடிக்கடி கண்டு வரு கிறேன். பால் மணம் மாறாத பாலர் ஒருவர் இந்தத் திருநாட்டில் தோன்றி அமிழ்தினும் இனிய தீந்தமிழில் பண்ணமைந்த பாடல்களைப் பொழியப் போகிறார். அவர் மூலமாகப் பல அற்புதங்கள் நிகழப் போகின்றன. பட்ட மரங்கள் தளிர்க்கப் போகின்றன. செம்பு பொன்னாகப் போகின் றது, பாஷாண்டிகள் பக்தர்களாகப் போகி றார்கள். அந்த இளம்பிள்ளையின் மூலமா கவே தென்பாண்டி நாட்டிலும் சமணர் களின் ஆதிக்கம் நீங்கும்; சைவம் தழைக் கும்; சிவனடியார்கள் பல்கிப் பெருகு வார்கள்.''

இவ்விதம் திருநாவுக்கரசர் பெருமான் கூறி வந்தபோது குலச்சிறையார் மெய் மறந்து புளகாங்கிதம் அடைந்து நின்றார்.

காஞ்சி பல்லவ சக்கரவர்த்தியின் அரண்மனை மிகமிக விஸ்தாரமானது. அது மூன்று பெரிய பகுதிகளாகப் பிரிக்கப் பட்டிருந்தது. மூன்று பகுதிகளின் வெளி வாசலும் அரண்மனையின் முன்புறத்து நிலா முற்றத்தில் வந்து சேர்ந்தன. மூன்று பகுதிகளுக்கும் பின்வால் விசாலமான அரண்மனைப் பூங்காவனம் இருந்தது.

மூன்றுக்கும் நடுநாயகமான பகுதியில் மாமல்ல சக்கரவர்த்தி தம் பட்ட மகிஷி வானமாதேவியுடன் வசித்து வந்தார். வலப் புறத்து மாளிகையில் புவனமகாதேவியும் மகேந்திர பல்லவருடைய மற்ற இரு பத்தினிகளும் வசித்தார்கள். இடப்புறத்து மாளிகை, அரண்மனைக்கு வரும் முக்கிய விருந்தாளிகளுக்காக ஏற்பட்டது. அந்த மாளிகையில் தற்சமயம் இலங்கை இளவர சர் தமது மனைவியுடன் வசித்து வந்தார். ஒவ்வொரு மாளிகையை ஒட்டியும் அரண் மனைக் காரியஸ்தர்கள், காவலர்கள் முதலி யோர் வசிப்பதற்குத் தனித்தனி இடங்கள் அமைக்கப்பட்டிருந்தன.

மூன்று மாளிகைகளையும் ஒன்றோ டொன்று இணைக்க மர்கப் பாதைகளும் தரைப்பாதைகளும் கரங்கப் பாதைகளும் இருந்தன.

சோழன் செம்பியன் மகளைப் புவனமகாதேவி தம் புதல்வியாகக் கருதிப் பாதுகாத்து வருவதாக வாக்களித்திருந்தார் என்று சொன்னோமல்லவா? அந்த வாக்கை அவர் பரிபூரணமாக நிறைவேற்றி வந்தார். அரண்மனையில் இருந்தாலும், வெளியே கோயில்கள் அல்லது மடங்களுக்குச் சென் றாலும், மங்கையர்க்கரசியைச் சதா சர்வ காலமும் அவர் தம்பக்கத்திலேயே வைத்துக் கொண்டிருந்தார்.

சரித்திரப் பிரசித்தி பெற்ற மகேந்திர பல்லவரைப் போலவே அவருடைய பட்ட மகிஷி புவனமகாதேவியும் சிவபக்தியிற் சிறந்தவர். சக்கரவர்த்தி சிவபதம் அடைந்த பிறகு அவர் தமது காலத்தைப் பெரும் பாலும் சிவபூஜையிலும் சிவபுராணங்களின் படனத்திலும் கழித்துவந்தார். அவருடைய அரண்மனையின் ஓர் அறையில் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து தினந்தோறும் ஆகம விதிகளின்படி அவர் பூஜை செய்துவந்தார். இந்தச் சிவபூஜைக்கு வேண்டிய பணி விடைகளைச் செய்யும் உரிமையை மங்கை யர்க்கரசி வருந்திக்கோரிப் பெற்றிருந்தாள். மேற்படி பணிவிடைகளை மிக்க பக்தி சிரத்தையுடன் நிறைவேற்றி வந்தாள். முன் பின் அறியாதவர்கள் அடங்கிய அந்தப் பிரம் மாண்டமான அரண்மனையில் மங்கையர்க் கரசி பொழுது போக்குவதற்கு அத்தகைய பூஜா கைங்கரியங்கள், சிறந்த சாதனமா யிருந்தன.

மாமல்லர் படையுடன் கிளம்பிச் சென்று மூன்று தினங்கள் வரையில்தான் அவ்விதம் எல்லாம் ஒழுங்காக நடந்தன. நாலாவது நாள் புவனமகாதேவியும் மங்கை யர்க்கரசியும் திருநாவுக்கரசரைத் தரி சித்துவிட்டு வந்தார்கள் அல்லவா? அன்று முதல் மங்கையர்க்கரசியின் கவனம் சிதறி சிதறிப் போய்விட்டது. தேவியார் சிவபூஜை செய்ய அமர்ந்த பிறகு, புஷ்பம் வேண்டிய போது தூபத்தையும், தூபம் கேட்டால் பிரசா தத்தையும் மங்கையர்க்கரசி எடுத்துக் கொடுக்கலானாள்.

இதையெல்லாம் கவனித்த புவன மகா தேவி பூஜை முடிந்த பிறகு, ''குழந்தாய்! இன்றைக்கு என்ன ஒரு மாதிரி சஞ்சலம் அடைந்திருக்கிறாய்? தகப்பனாரை நினைத் துக் கொண்டு கவலைப்படுகிறாயா? என் னைப் பார்த்துக் கொள், குழந்தாய்!

# அருள்வாக்கு



எனக்கு முன்னால் வாழைப்பழச் சீப்பு வைத்திருக்கிறது. "இதைப் பார், இது மஞ்சளாக இருக்கிறது" என்று நான் சொன்னால், இது மஞ்சளாகத்தான் இருக்கிறது என்று காண்கிறீர்கள். அதற்குமேல் மனசில் அதைப் பற்றி எந்தப் பிரதி சிந்தனையும் (Reaction) எழுவதில்லை. மாறாக, இதே வாழைப்பழத்தைக் காட்டி, "இதோ பார், இது சிவப்பாக இருக்கிறது" என்று நான் சொல்லியிருந்தால்? உடனே உங்கள் மனசில் ஓர் ஆட்சேப உணர்ச்சி எழுந்திருக்கும். இது மஞ்சள் என்றோ, சிவப்பு என்றோ நான் சொல்லாமல், "இந்த வாழைப்பழம் சிவப்பாக இருப்பதாக நினைத்துக் கொள்ளுங்கள்" என்று சொன்னால் அப்போது உங்கள் மனசில் ஒரு விதமான பிரதி உணர்ச்சி உண்டாகிறது. மஞ்சள் பழத்தையே சிவப்பாக இருப்பதுபோல் உங்கள் மனசினால் கற்பனை செய்து பார்க்கிறீர்கள். மனசை ஒருமுகப்படுத்தினால் அப்படிப் பாவிக்கவும் முடிகிறது.

உபாசனை என்பது இப்படிப்பட்டதுதான். பரம்பொருள் இப்படி இப்படி இருப்பதாகப் பாவியுங்கள் என்று பலவிதமான குணங்களைக் கொண்ட பல மூர்த்திகளைக் காட்டிக் கொடுக்கிறது உபாசனா மார்க்கம். வாழைப்பழம் உண்மையில் மஞ்சள் நிறம் என்பது போல் பரமாத்மாவின் உண்மைக் குணம் என்பது என்ன? அது குணம் கடந்தது என்பதே. பரமாத்மா எல்லா குணமும் கடந்த வஸ்து என்று சொல்லிவிட்டால், அப்புறம் ஜனங்களின் மனசு அதில் மேற்கொண்டு நிற்பதற்கு இடமே இல்லை. இது நமக்குப் புரியாத வஸ்து என்று விட்டுவிடுவார்கள். வாழைப்பழத்தைச் சிவப்பு என்று சொன்னதை மனசு ஆட்சேபித்தது போல், ஒரு சிலையைக் காட்டி, இதுதான் பரமாத்மா என்றால், அதை எவராலும் ஏற்க முடியாது. 'இது ஒரு கல் பொம்மை அல்லவா? இது எப்படி உலகத்தை நடத்துகிற பரமாத்ம சக்தி ஆகும்?' என்று தோன்றும். ஆனால் ஒரு சிலையைக் காட்டி, "இதைப் பரமாத்மா என்று பாவியுங்கள்" என்றால் அப்படிப் பாவிக்க முடிவதாகத் தோன்றும் - வாழைப் பழத்தைச் சிவப்பாகக் கற்பனை செய்வது போல். ஆனால் சிவப்பு என்றால் என்னவென்று மனசுக்குத் தெரிவது போல் பரமாத்ம லட்சணம் தெரியாதே! அதனால் விக்கிரகத்தை 'ஏதோ பெரிய வஸ்து' என்று சிறிது எண்ணிப் பார்க்கலாமே தவிர, அதிலேயே ஆழ ஊன்றி நிற்க முடியாது. தெரிந்த விஷயங்களில்தான் மனசு பிடிமானத்தோடு நிற்கும். எனவே, ஒரே காருண்யமும் சௌந்தரியமும் வழிகிற மாதிரி ஸ்திரீ ரூபத்தில் விக்கிரகம் செய்து, "இதில் பரமாத்மா தாயாராக வந்திருக்கிறார் என்று பாவனை பண்ணு" என்றால் மனசு அதை நன்றாகக் கிரகித்துக் கொண்டு அப்படியே ஆழ்ந்து ஈடுபட முடிகிறது.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

என்னுடைய ஏக புதல்வனைப் போர்க் களத்துக்கு அனுப்பிவிட்டு நான் நிம்மதியாக இருக்கவில்லையா?" என்று தைரியம் கூறினார்.

அப்போது மங்கையர்க்கரசி சிறிது நாணத்துடன், "இல்லை அம்மா! அப்படியெல்லாம் கவலை ஒன்றுமில்லை!" என்றாள்.

"பின் ஏன் உன் முகத்தில் சிந்தனைக்கு அறிகுறி காணப்படுகிறது? இந்த அரண்மனையில் வசிப்பதில் ஏதாவது உனக்குத் தொந்தரவு இருக்கிறதா?" என்றார் மகேந்திரரின் மகிஷி.

"தொந்தரவா? இவ்வளவு சௌக்கியமாக நான் என் தந்தையின் வீட்டிலே ஒரு நாளும் இருந்ததில்லை. என் மனத்திலும் சஞ்சலம் ஒன்றுமில்லை. நாவுக்கரசர் பெருமானோடு தாங்கள் வார்த்தையாடிக் கொண்டிருக்கையில், வாலிபர் ஒருவர் வந்தாரல்லவா? அவரை எங்கேயோ ஒரு முறை பார்த்த ஞாபகமிருந்தது. அதையொட்டிச் சில பழைய ஞாபகங்கள் வந்தன. வேறொன்றுமில்லை அம்மா" என்று மங்கையர்க்கரசி கூறினாள்.

(தொடரும்)

பெங்களூர் ரிப்போர்ட் :

# அமைச்சர் ரமேஷின் ராஜினாமா!


ரமேஷ்

கர்நாடக அமைச்சரவையிலிருந்து அமைச்சர் ரமேஷ் ராஜினாமா செய்து விட்டதாகச் செய்தி வந்துள்ளது. என்ன நடந்தது?

நாடெங்கும் சமீபத்தில் இடைத் தேர்தல்கள் நடைபெற்றன அல்லவா... கர்நாடகத்திலும் மூன்று தொகுதிகளில் தேர்தல். அதில் ஒன்று குனிகல். தேர்தல் தினத்தன்று வாக்குச் சாவடிகளுக்குத் தன் பரிவாரங்களுடன் போயிருக்கிறார் அமைச்சர். குறிப்பிட்ட வாக்குச் சாவடி ஒன்றில் அமைச்சர் நுழைய முற்பட்ட போது, ''அமைச்சர் வேண்டுமானால் நுழைந்து பார்வையிடட்டும்; உடன்வரும் ஆதரவாளர்களை அனுமதிக்க மாட்டோம்'' - என்று எதிர்க்கட்சியினர் சொல்ல, வாய்த் தகராறும் தொடர்ந்து ரகளையும் ஏற்பட்டிருக்கிறது. அதில் உள்ளூர்வாசிகள் சிலருக்குக் காயம் ஏற்பட, கோபமுற்ற மக்கள் கூட்டம் ரமேஷும் மற்ற அமைச்சர்களும் தங்கியிருந்த் டிராவலர்ஸ் பங்களாவைச் சுற்றிக் குழுமியிருக்கின்றனர். மக்களின் ஆர்ப்பாட்டம் அதிகமாகவே டிராவலர்ஸ் பங்களாவின் மொட்டை மாடிக்கு வந்தார் அமைச்சர். பிறகு... அங்கிருந்து துப்பாக்கி வெடித்துக் குண்டுகள் மக்களை நோக்கிப் பறந்தன. அங்கேயே ஒருவர் மரணம்! வேறு சிலர் காயமுற்று ஆஸ்பத்திரியில்.

வெகுண்டெழுந்தன எதிர்க்கட்சிகள்! ரமேஷின் ராஜினாமாவைக் கோரின. கைது செய்ய வேண்டும் என்றும் கூறின. ஆனால் பங்காரப்பா ரமேஷை விட்டுக் கொடுக்கவில்லை. 'ஜனங்கள் கற்களையும் கொலைக் கருவிகளையும் வைத்துக் கொண்டு அமைச்சரைத் தாக்க வந்ததனால் பாதுகாப்புக் கருதி, அமைச்சரின் பாதுகாவலர் துப்பாக்கியால் சுட்டார்' என்பது அரசுத் தரப்பு வாதம். எதிர்க்கட்சிகள் மாநிலம் தழுவிய போராட்டத்துக்குத் தயாராக, ஒரு வழியாக இப்போது ரமேஷ் ராஜினாமா செய்து விட்டார்.

ரமேஷின் மனைவி தற்சமயம் விஜயகாந்த் நடிக்கும் 'ஏழை ஜாதி' - என்ற படத்தைத் தயாரித்து வருகிறார், என்பது கொசுறு செய்தி.

## தமிழர்களின் பயம்!

காவேரிப் பிரச்னை தொடர்பாகக் கர்நாடகம் முழுக்க நடந்த கலவரங்களில் பாதிக்கப்பட்ட தமிழர்கள், தங்கள் குறைகளைச் சொல்ல ஒரு கமிஷன் நியமிக்கப்பட்டது. அதற்கான அலுவலகம் திறந்து வைத்துச் சில வாரங்கள் ஆகியும் ஒரு தமிழன் கூட அங்கே சென்று தனக் கேற்பட்ட பாதிப்புகளைத் தெரிவிக்கவில்லை. என்ன காரணம்? பயம்தான். ஏற்கெனவே பாதிக்கப்பட்டவர்கள் போலீஸ் ஸ்டேஷனில் புகார் கொடுக்க... புகார் கொடுத்தவர்களின் பெயரும் விலாசமும் ஆர்ப்பாட்டக்காரர்களுக்குப் 'போய்' மறுபடி வந்து அவர்கள் தாக்கி விரட்டியடிக்க... அரசாங்கத்தின் மீது எப்படி நம்பிக்கை வரும்?

எனவே, திரும்பவும் தமிழ்ச் சங்கமே பொறுப்பேற்று எல்லாருடைய புகார்களையும் ஒன்றுதிரட்டி கமிஷனிடம் சமர்ப்பித்திருக்கிறது. எப்படி தீர்வு காண்கிறார்களோ, பார்க்கலாம்.

## ஜப்பான் மாடல் நகரம்

பெங்களூருக்கு ஓர் அதிர்ஷ்டம் அடிக்கப் போகிறது. இந்தியாவில் தங்களின் மாதிரி நகரம் ஒன்றை அமைக்க முன் வந்த ஜப்பானியக் குழு ஹரியானா, ம. பி., உ.பி., ஆந்திரா என்று பல இடங்களைப் பார்த்து விட்டு, பெங்களூருக்கு முப்பது கி.மீ. தூரத்திலிருக்கும் 'பிடுதி' என்ற இடத்தைத் தேர்ந்தெடுத்திருக்கிறது. விஞ்ஞானமும், தொழில் நுட்பமும், நவீனமும் கலந்த தொழிற்பேட்டை, நகரம், ஷாப்பிங் சென்டர் என்று இது இருக்குமாம். கிட்டத்தட்ட நவீனரகத் தொழிற்சாலைகள் மட்டும் பதினான்கிற்கு மேல் நிறுவப்படுமாம். இம்மாதிரி நகரங்கள் ஏற்கெனவே சிங்கப்பூர், மணிலா, ஹாங்காங், நார்வே முதலிய நாடுகளில் உள்ளனவாம்.

இம்மாதிரியான 'மாடல் நகரங்கள்' எதுவும் அமைக்க தமிழக அரசின் முயற்சி ஏதாவது இருக்கிறதா? அதெல்லாம் எதற்கு என்கிறீர்களா...? அதுவும் சரிதான். நமக்குக் கட்-அவுட்டுகளே போதும்.

- பெர்னாண்டஸ்

# ஒரு புத்திசாலித்தனமான அடி



மார்ச் 31, 1992 வரை உங்களுக்கு கிடைத்துள்ள மூலதன ஆதாயங்களுக்கு வரிவிலக்கு பெற

## ஐடிபிஐ

### முதலீட்டு பத்திரங்களில்

முதலீடு செய்யும் இறுதி வாய்ப்பு

**இத்திட்டத்தின் கீழ் முதலீடு செய்ய இறுதி தேதி செப்டம்பர் 30, 1992.**

நிலம், கட்டடம், ஆபரணங்கள், பங்குகள் போன்ற நீண்டகால முதலீட்டு ஆதாயத்திற்கு வருமான வரி உண்டு. ஆனால் இவ்வரியிலிருந்து விலக்கு பெற வாய்ப்பும் உள்ளது. உங்கள் மூலதனத்தை முழுமையாக பெற மற்றும் இதிலிருந்து லாபமும் பெற ஐ டி பி ஐ முதலீட்டு பத்திரங்களில் முதலீடு செய்யுங்கள்.

- பத்திரங்கள் செப்டம்பர் 30, 1992, வரை சம விலையில் கிடைக்கும்.
- வருமான வரிச் சட்டம் 1961 பிரிவு 54E - ன் கீழ் மதிப்பீடு ஆண்டு 1992-93 க்கு மூலதன ஆதாயத்திற்கு வரிவிலக்கு உண்டு.
- வருடத்திற்கு 9% என்ற விகிதத்தில் 6 மாதத்திற்கு ஒரு முறை வட்டி வழங்கப்படும்.
- வெளிநாட்டில் வசிக்கும் இந்தியர்களின் (நான்-ரெஸிடெண்ட்) முதலீடுகளும் ஏற்றுக் கொள்ளப்படும்.
- முதலீடு செய்தவர் விரும்பினால், 3 ஆண்டுகளுக்கான மொத்த வட்டியையும் தள்ளுபடி முறையில் முன்னதாகவே ஒரே நேரத்தில் வழங்கப்படும்.
- எவ்வித வரியும் வட்டி வழங்கும்போது கழிக்கப்பட மாட்டாது.
- வெளியூர் காசோலை ஏற்றுக் கொள்ளப்பட்டு அவற்றை மாற்றுவதற்கான செலவை ஐ டி பி ஐ ஏற்றுக் கொள்ளும்.
- பிரிவு 80 L ன் கீழ் வருமான வரியில் லாபம்.

## நாட்டின் தொழில் வளர்ச்சியிலும் பெறும் பங்கு.



மேற்கொண்டு விவரங்களுக்கு அருகாமையிலுள்ள ஐடிபிஐ ஆபீசை அணுகுங்கள் அல்லது மானேஜருக்கு எழுதுங்கள்.

**இண்டஸ்ட்ரியல் டெவலப்மெண்ட் பாங்க் ஆப் இந்தியா**

ஐடிபிஐ டவர், கஃப் பரேட், பம்பாய்-400 005. போன்: 218 9111/21.



# திருவள்ளுவர்

## ஆத்திகரா, நாத்திகரா?

**"திருவள்ளுவர் ஆத்திகரா, நாத்திகரா? விளக்கம் வேண்டும்?"**

"அவர் மூடத்தனமில்லாத ஆத்திகர். சடத்தன மில்லாத நாத்திகர். ஆத்திகத்தில் - மூடத்தனம் கலக்கும் போது தத்துவம் மறைந்து போகும். அறிவாராய்ச்சியற்ற சடங்குகள் - அனுஷ்டானங்கள் - மட்டுமே நிற்கும். அவற்றால் எள்ளளவும் பல னில்லை. இடுப்பில் வேட்டி (தத்துவம்) நிற்ப தற்காக 'பெல்ட்' (அனுஷ்டானம்) அணியத் தொடங்குகிறோம். காலப் போக்கில் வேட்டியை நழுவவிட்டு விட்டு பெல்ட்டை மட்டும் இறுக்கிப் பிடித்துக் கொள்கிறோம். இது மூடத்தனம் தானே!

"நாத்திகத்தில் - சடத்தனம் மிகுந்து விடுவதால் நம் சிற்றறிவுக்கு அப்பாற்பட்ட அற்புதங்கள் எத்தனை நிகழ்ந்தாலும் ஒத்துக் கொள்ளும் உணர்வு இல்லாமல் போகிறது. 'பரந்து கெடுக உலகியற்றியான்' 'தெய்வத் தான் ஆகாது எனினும்' என்றெல்லாம் முழங்கும் போது, மாற்றங்களை நம் அறி வாலும் முயற்சியாலும் உருவாக்க வேண் டும், கடவுளை மட்டும் நம்பிக் கொண் டிருக்கக் கூடாது என்று நாத்திகர் போல் பேசுகிறார்.

"தெய்வம் மடிதற்றுத்தான் முந் துறும்" என்று சொல்லும் போதும், கடவுள் வாழ்த் தில் இறைவனின் பண்புகளை விளக்கும் போதும் அப்பழுக்கற்ற ஆத்திகராய் நம் மெய்யுணர்வை மீட்டுகிறார்."

**"ஈகைக்கும் ஒப்புரவுக்கும் என்ன வேறுபாடு? விளக்கம் வேண்டும்."**

"ஈகை என்பது உடனடி நிவாரணம். தனி மனிதனுக்கோ, சமுதாயத்துக்கோ சிக்கல் ஏற்படும் போது உடனடியாக அந்தத் துன்பத்தை நீக்க வேண்டிச் செய்யும் உதவி களே 'ஈகை' ஆகும்.

"ஒப்புரவு என்பது நிலையான தீர்வு. தனிமனிதனுக்கோ, சமுதாயத்திற்கோ மீண் டும் மீண்டும் ஒரு சிக்கல் ஏற்படா வண்ணம் நீண்ட நாள் நோக்கில் ஒருவரை ஒருவர் அனுசரித்துப் போய் நிலையாகச் செய்யும் நற்பணிகள்.

**"வேலை செய்வதற்குத் தேவையான வெப்ப ஆற்றலைக் கணக்கிட, ஒரு புதிய அலகை இன்றைய அறிவியலார் கண்டு அதற்குக் 'கலோரி' என்று பெயரிட்டுள் ளார். ஆனால் இரண்டாயிரம் ஆண்டு களுக்கு முன்பே திருவள்ளுவர் இதைக் கண்டு பிடித்த குறிப்பு ஒரு குறளில் தெரிகிறது. குறள் எது?"**

"தீ அளவு இன்றித் தெரியான் பெரிது உண்ணின் நோயளவு இன்றிப் படும்' என்ற குறளில் இன்றைய அறிவியலாரின் 'கலோரி' என்ற அலகிற்கு இணையாகத் திருவள்ளுவர் கையாண்டுள்ள சொல் 'தீ அளவு'.

"நாம் ஈடுபட்டிருப்பது கடினமான உடல் உழைப்பா மூளை உழைப்பா அல்லது இரண்டும் கலந்ததா என்பதை யெல்லாம் சிந்திக்க வேண்டும். அதற்குத் தேவைப்படும் வெப்ப ஆற்றல் - தீ அளவு - கலோரி எவ்வளவு என்பதையும் அனு மானிக்க வேண்டும். அந்தத் தேவைக்கு ஏற்ப எரிபொருளாகிய உணவை உண்ண வேண்டும்.

"சுவைக்கு அடிமைப்பட்டு அள்ளித் திணித்துவிட்டால் அதிகப்படியானதை உடல் அங்கங்கே சேமிக்கத் தொடங்கும். உடலின் எடை கூடும். கொழுப்பைச் சேமித்தால் கொழுப்படைப்பு ஏற்பட்டு மாரடைப்பு நோயில் போய் முடியும். சர்க்கரையைச் சேமித்தால் நீரிழிவு நோயில் போய் முடியும். இப்படிப் பலவித நோய்கள் உடலைத் தாக்கி விரைவில் உடலை வீழ்த்திவிடும் என்கிறார் பெருந்தகை."

தொகுப்பு : சுப்ர பாலன்

நன்றி : ("கேட்டதும் கிடைத் ததும்" 106 தலைப்புக்களில் திருக் குறளை ஒட்டிய கேள்விகளுக்குப் பதி ன் கவனகர் (தசாவதானி) இராமையா அளித்த பதில்களின் தொகுப்பு நூல். வெளியிட்டோர் - திருக்குறள் இரா மையா பதிப்பகம், கலைஞர் கருணா நிதி நகர், கோவில்பட்டி - 627 701. விலை ரூ. 20.)



# நெஞ்சைத் தொட்டுச் சொல்லு

**கா**தல் என்கிற சலனமே இடம் பெறாத - இடம்பெற அனுமதி மறுக்கும் கதாநாயகி - வித்யாஸ்ரீ.

அடிப்படை நோக்கங்கள் சரியானவையாக இருந்தாலும் அவற்றைச் செயல்படுத்தும் முறையில் முரட்டுத்தனம் இடம்பெறுவதாலேயே அனைவருடைய விரோதத்தையும் சம்பாதித்துக் கொள்ளும் சின்னப்பண்ணை - கே. பாரி.

'பதினாறு வயதினிலே' சப்பாணியை நினைவுபடுத்தும் அப்பாவி இக்கிரி - டி. என். கண்ணா. (கதை, திரைக்கதை, வசனம், பாடல்கள், இசை, டைரக்‌ஷன்... எல்லாமே இவர் பொறுப்பு. புதியவராக இருந்தாலும் துணிந்து செயல்பட்டிருக்கிறார். அதற்காகவே ஒரு பேஷ்.)

வயதுக்கேற்ற நிதானமும் அனுபவம் கொண்டு தந்த விவேகமும் நிரம்பப் பெற்ற நிறைகுடமான அம்பலக்காரர் - ஜி. ஸ்ரீனிவாசன்.

இந்த நான்கு பேரும் மனத்தில் நிற்கிறவர்கள்.

அடுத்து நிற்பவை பாடல்கள்.

கதையின் ஆழமான போக்குக்கு இடையூறாக ஒரு மசாலாத் திருப்பம் நரம்படி நாகப்பனின் அறிமுகம். கதாசிரியர் தடம் மாறியிருப்பது இங்கேதான். கூடவே கதையும் திசை மாறி விடுகிறது.

என்றாலும், அநேகமாக எல்லாருமே அதிகம் பரிச்சயமில்லாத முகங்கள் என்பதே பெருத்த ஆறுதல், பனிச்சென்று ஜன்னலைத் திறந்ததும் மென் காற்று வீசுவதைப் போல.

வழக்கமான கிராமியப் பின்னணிதான் என்றாலும் காதல், கத்தரிக்காய், டூயட், ஒட்டம், ஆட்டம், பிரிவுத் துயரம், அம்மன் கோயில் தீமிதி... வழக்கமான சமாசாரங்கள் இல்லாதது அடுத்த ஆறுதல்.

கவுண்டமணி - செந்தில் - இடையில் ஒரு பெண் என்கிற விரசமான நகைச்சுவைப் பாரம்பரியம் இல்லாதது எல்லாவற்றையும் விட மிகப் பெரிய ஆறுதல்.

முற்பகுதி திருநெல்வேலி அல்வா.

பிற்பகுதி மணப்பாறை கைமுறுக்கு.

— சி. ஆர். கே.

# சிறுகதை

**கா**லை பூஜை முடிந்து தன் தனி அறையில் வந்து அமர்ந்தார், தொழிலதிபர் சக்கரவர்த்தி. நெற்றியில் விபூதிக்கீற்று. லேசான முன் வழுக்கை. எதிராளியின் மனோபாவத்தை எடை போடும் கூர்மையான கண்கள். சுமாரான உயரம். மாநிறம். ஆனால் முகத்தின் கம்பீரம் பார்ப்பவரை வசீகரிக்கும்.

அவரின் உதவியாளன் குமார் பவ்யமாய் உள்ளே வந்தான்.

''குட்மார்னிங் சார்.''

''எஸ் குமார்.''

''உங்களைப் பார்க்க ஓர் இளைஞர் வந்திருக்கார். உங்களுக்குச் சொந்தம்னு சொல்றார்!''

''ஓகோ. சரி வரச் சொல்லு.''

குமார் வெளியே சென்று அந்த இளைஞனை அழைத்துக் கொண்டு வந்தான்.

''மோகன் நீயா! எப்போ வந்தே? அப்பா எப்படி இருக்கார்?'' என்று அன்பொழுக விசாரித்த சக்கரவர்த்தி, ''நீ என்ன பண்றே?'' என்றார்.

''படித்து முடித்து ரெண்டு வருஷம் ஆச்சு சார். வேலை கிடைக்கலே. நீங்க சிபாரிசுக் கடிதம் கொடுத்தால் உடனே கிடைச்சுடும்!'' என்றான்.

''இந்த ரெண்டு வருஷமா என்ன செஞ்சே?''

''சும்மாதான் சார் இருந்தேன். பேப்பரில் பார்த்து வேலைக்கு விண்ணப்பிச்சுக்கிட்டு இருந்தேன்.''

குமாருக்கு அந்த இளைஞனைப் பார்க்கப் பரிதாபமாய் இருந்தது. முதலாளி நிச்சயம் உதவுவார் என எதிர் பார்த்தான்.

''இதோ பாரு மோகன், இன்னும் முயற்சி பண்ணு. வேலை கிடைச்சுடும். என் சிபாரிசுக் கடிதத்துக்கெல்லாம் இப்ப மதிப்பு இல்லேப்பா'' என்று தட்டிக் கழித்தவரை வியப்புடன் பார்த்தான்.

இளைஞனின் நிலை இரக்கப்படும்படி இருந்தது. ஆனால் முதலாளி மனம் இளகவில்லையே!

**அ**டுத்த நாள் இன்னொரு இளைஞன் உள்ளே வந்தான். பிரகாஷ் என்று தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டான்.

''சொல்லு பிரகாஷ்.''

''சார், பன்னிரண்டு வகுப்புக்கு மேலே படிக்க முடியலே. வீட்டுப் பொருளாதாரம் அப்படி. ஆட்டோமொபைல் கடையிலே வேலை பார்க்கறேன். அவங்க கொடுக்கற சம்பளம் போதலே. ஆனால் இந்த மூணு வருஷத்துல தொழிலைக் கத்துக்கிட்டேன். இப்ப சொந்தமாச் சின்ன அளவுல நானே கடை நடத்தலாம்னு பிரியப்படறேன்.''

''ஓகோ!''

''ஆனால் என்னை நம்பிக் கடன் கொடுக்கவோ, பணம் கொடுக்கவோ ஆளில்லை. நீங்க பார்த்துக் கொஞ்சம்



உதவினால் நான் முன்னுக்கு வந்துடுவேன்.''

அவனிடம் இரண்டு, மூன்று கேள்விகள் கேட்டார் சக்கரவர்த்தி.

''எவ்வளவு பணம் ஆகும்னு நினைக்கறே கடை ஆரம்பிக்க?''

''முப்பதாயிரம் ஆகும் சார்.''

''என்னிடமிருந்து எவ்வளவு எதிர் பார்க்கறே?''

''பத்தாயிரம் ரூபாய்.''

''அப்போ மீதி?''

''எனக்காக நீங்க ஜாமீன் கையெழுத்துப் போட்டால் வங்கியிலே இருபதாயிரம் கடன் கொடுக்கிறதாச் சொன்னாங்க. என் உழைப்பு மூலமா அதை மாசாமாசம் அடைச்சுக்கிட்டு வருவேன்.''

''குட்'' என்றார் சக்கரவர்த்தி திருப்தியாய்.

நன்றி சொல்லிவிட்டு, பிரகாஷ் வெளியே சென்றான் முகமலர்ச்சியுடன்.

''என்ன குமார், ஏதோ கேட்க ஆசைப்படறே போலிருக்கே?'' என்றவரைத் திகைப்புடன் பார்த்தான்.

தன் மனத்தைப் படித்து விட்டாரே என்ற ஆச்சர்யம் அவனுக்கு.

''ஆமாம் சார். ஒரு சந்தேகம்...''

''சந்தேகமா? அதை ஆரம்பத்துலேயே தெளிவு பண்ணிக்கறதுதான் நல்லது.''

''நீங்க பிரகாஷுக்கு உதவினது சரிதான். ஆனால் அதுக்கு முன்னாடி, வேலைக்குச் சிபாரிசுக் கடிதம் கேட்டு வந்தாரே உங்கள் சொந்தக்கார இளைஞர் ஒருவர். அவருக்கு ஏன் உதவ மறுத்திட்டீங்க? பிரகாஷுக்கு ஜாமீன் கையெழுத்தும் போட்டு, பத்தாயிரம் பணமும் தரணும். ஆனால் அவருக்கு வெறும் கடிதம் தானே தரணும்'' என்றவனைப் புன்னகையுடன் பார்த்தார் சக்கரவர்த்தி.

''பிரகாஷுக்கும், மோகனுக்கும் நிறைய வித்தியாசம் இருக்குப்பா.''

''என்ன சார்?''

''ரெண்டு வருஷமா வேலை கிடைக்கலேன்னு, மோகன் சொன்னான் இல்லையா?''

''ஆமாம் சார்.''

''ஆனால் இந்த ரெண்டு வருஷமா என்ன செஞ்சேன்னு கேட்டதுக்கு அவன் என்ன பதில் சொன்னான்?''

''வேலை தேடிக்கிட்டு இருந்ததாச் சொன்னார்.''

''கரெக்ட். அவன் விரும்பறது உழைப்பை இல்லை. சட்டைக் காலரில் கறை படாத வேலை. நல்ல சம்பளம். சோம்பேறித்தனமான வாழ்க்கை. இந்த ரெண்டு வருஷமா வீட்டுல உட்கார்ந்து சாப்பிட்டதுக்கு நடுவுலே, அவன் வேற ஏதாவது தொழிலைக் கத்துக்கிட்டு இருக்கலாமே! உழைக்கத்தயங்கற வறட்டுக் கௌரவம். அதுதான் நம்ம நாட்டு இளைஞர்களோட பெரிய பலவீனம். புரியுதா?''

தலையாட்டினான் குமார்.

''ஆனால் பிரகாஷோட பேச்சில் முன்னேறத்துடிக்கும் ஆவல் இருக்கு. உழைக்கணுங்கற வெறி இருக்கு. அவன் முப்பதாயிரத்தையும் உதவியாய்க் கேட்காம, பத்தாயிரம் மட்டும் கேட்டதிலிருந்து தெரியுது அவனோட நம்பிக்கையும், உழைப்பில் இருக்கிற ஆர்வமும். அதனாலதான் பிரகாஷுக்கு உதவினேன். அவனுக்கு மறுத்தேன். நாம செய்யற உதவியாரையும் சோம்பேறியாக்கிடக் கூடாது பாரு. அதனாலதான்!'' என்றவரை ஆமோதிப்புடனும், மதிப்புடனும் பார்த்தான் குமார்.

என்.பாஸ்கர்



ஆர். டி. ஜோஷி



சி. எஸ். உபஜனாதிபதி?

## பம்பாய்க் கடிதம் :

# மொட்டை மாடியில் கரும்புச் சாகுபடி!

●● இன்று வரும், நாளை வரும் என்று எதிர்பார்த்திருந்த பருவ மழை, ஒருவழியாக ஜூன் 20-ம் தேதி இரவு பம்பாயை நனைத்தது! (எப்போதும் பெய்யும் அளவில் கால் பங்கு கூட இல்லை!) ஒவ்வொரு வருடமும் பம்பாய் கார்ப்பரேஷன், மத்திய ரயில்வே மற்றும் மேற்கு ரயில்வே அதிகாரிகள் 'இந்த வருடம் மழையினால் பம்பாய் கண்டிப்பாய் பாதிக்கப்படாது; அதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டு விட்டன' என மார் தட்டிக் கொள்வது வழக்கம். ஒவ்வொரு வருடமும் அவர்கள் முகத்தில் பருவமழை கரிபூசுவதும் வழக்கம்! இம்முறை முதல் நாள் பெய்த சிறு மழையிலேயே மத்திய ரயில்வே போக்குவரத்து அம்பேல்!

●● அடுத்த உபஜனாதிபதியாக மகாராஷ்டிரா கவர்னர் சி. சுப்ரமணியம் செல்வார் என பம்பாயில் பரவலாகப் பேசப்படுகிறது. இது பற்றி ஒரு முக்கிய மத்திய மந்திரி (ஷரத் பவார்?) சி. எஸ்ஸைச் சந்தித்துக் கேட்டதும் உண்மை. சங்கர் தயாள் சர்மா உபஜனாதிபதியாவதற்கு முன் மகாராஷ்டிரா கவர்னராகத்தான் இருந்தார் என்பதால் இப்போதும் சரித்திரம் திரும்பும் என்று எதிர்பார்க்கிறார்கள்.

●● பாந்த்ரா - இது பம்பாய் கான்கிரீட் காட்டின் ஒரு முக்கியப் பகுதி. இங்கே ஒரு வீட்டின் கூரையில் விவசாயம் நடக்கிறது. டாக்டர் ஆர். டி. ஜோஷி தமது வீட்டு மொட்டை மாடியில் போன வருடம் முக்கியப் பயிராகக் கம்பு அறுவடை செய்தார். இவ்வருடம் கரும்பு பயிரிட்டிருக்கிறார். இதைத் தவிர காய்கறி, பழம், பூ என்று விளைவிக்கிறார். தமது 1,200 சதுர அடி மொட்டை மாடியிலிருந்து ஒவ்வொரு வருடமும் 10,000 ரூபாய் லாபம் கிடைப்பதாக ஜோஷி கூறுகிறார். இதற்காக அவர் உழைக்கும் நேரம் - ஒரு வாரத்தில் நான்கு மணி நேரம் மட்டுமே!

●● திவாலான கராட் வங்கியின் தலைமை அலுவலகத்தின் முன்பு தினமும் ஆயிரக்கணக்கில் மக்கள் கூடுகிறார்கள். அந்த வங்கியில் டெபாசிட் செய்திருந்த தங்கள் சேமிப்பில் ஏதாவது திரும்பக் கிடைக்குமா என்று ஏக்கத்துடன் பார்க்கிறார்கள். இதில் மிக அதிகமாக பாதிக்கப்பட்டவர்கள் 'மாதாடி' ஆட்கள் எனப்படும் மூட்டை தூக்கிகள்தாம். அவர்களது மொத்த காப்பு நிதியும் இந்த வங்கியில்தான் இருந்தது. குற்றவாளி, கராட் வங்கி நிர்வாகிகளா ரிசர்வ் வங்கியா அல்லது தங்கள் தலைவிதியா என்று தெரியாமல் தவிக்கிறார்கள் இந்த அப்பாவி மக்கள்!

- அம்ருதா பார்த்தசாரதி

# நிலா மயக்கம்

**14**

நந்தினி அசைவின்றி நின்றாள்.

புவனாவின் வாழ்வைக் கெடுக்க வேண்டும் என்ற நோக்கத்துடனா நான் இப்படி எல்லாம் நடந்து கொள்கிறேன்?

தேவராஜ் பேசி முடிப்பதற்குள் தன்னைத்தானே நூறு முறையாவது அந்தக் கேள்வியைக் கேட்டுக் கொண்டாள். இல்லை. நிச்சயம் இல்லை.

'இந்த மாதிரி பொண்டாட்டி எனக்கு வேணாம். இப்பவே, இந்த நிமிஷமே நீ வீட்டை விட்டுப் போய்டு.'

கடைசி வாக்கியம், நந்தினியை அம்பாகத் தைத்தது. அவளால் எதிர்த்துப் பேச முடியவில்லை. கண்ணில் பெருகிய நீரைக் கட்டுப்படுத்த முடியவில்லை.

இதுதான் முடிவா?

எல்லை மீறிய சோகத்தில் நந்தினி மெல்ல விம்மத் தொடங்கினாள்.

''டேய்... தேவராஜ்'' என்று பாட்டியின் குரல் கேட்டது. அதில் கடுமை இருந்தது.

தேவராஜ் பாட்டியின் பக்கம் திரும்பவில்லை.

''என்னடா நீ பாட்டுக்குப் பேசிக்கிட்டே போறே? நந்தினி நம்ப வூட்டுக்கு வந்திருக்கிற அடுத்த வூட்டுக் கொழந்தை. அதைப் போய் இப்படித் திட்றியே. ஒனக்கே நியாயம் இருக்குதா? ஒனக்கு ஒம்மேல கோவம். தங்கச்சியை வளக்கத் தெரியாம வளத்துட்டமேன்னு. அதுக்கு இவ என்ன பண்ணுவா? அப்படி என்னதான் பண்ணிட்டா? புவனா லவ் பண்றது ஒனக்குத் தெரிஞ்ச ஒடனே நீ என்ன பண்ணே? வயசுக்கு வந்த பொண்ணை ஊரார் முன்னால கைநீட்டி அடிச்சே. வூட்டை வுட்டு வெளிய போவக் கூடாதுன்னு சொன்னே. நந்தினி சொல்லியிருந்தா, புவனா லவ் பண்ற பையன் எப்படின்னு வெசாரிப்பாளாம். பெரிசாச் சொல்ல வந்துட்டான். ஒனக்குத்தானே மொதல்ல வெஷயந் தெரிஞ்சது. நீ பொறுப்பானவனா இருந்திருந்தா அப்பவே விசாரிச்சிருக்க வேணாம்?''

பாட்டிக்கு மூச்சிரைத்தது. பேச்சை நிறுத்தினாள். வெற்றிலை உலக்கையை 'ணங்' 'ணங்'கென்று இடித்துத் தன் கோபத்தை வெளிப்படுத்தினாள். யாரும் பேசவில்லை. நந்தினி இன்னும் உறைந்த நிலையிலேயே நின்றிருந்தாள். பாட்டியின் உலக்கைச் சத்தம் மட்டும் அங்கிருந்த மௌனத்தைக் கலைக்க முயன்று கொண்டிருந்தது.

''என்னடா கேக்கறேன். பதிலே காணும்? நாங்கூடத்தான் லவ் பண்ணிக் கல்யாணம் பண்ணேன். இந்த ஆம்பிளைக் கெழத்துக்குப் புத்தி அப்பப்ப வயலுமீன் மாதிரி இப்படி அப்படிப் பாய்ஞ்சாலும் என்னை வுட்டா நாதி இல்லேன்னு தெரியும். அடங்கிக் கெடக்கறாரு! எல்லா ஆம்பிளைங்களும் அப்படித்தானே இருக்காங்க? ஒருத்தனாவது கறந்த பாலாவா இருக்கான்? நாத்தனாருக்கு மனசு போல மாங்கல்யம் கெடைக்கட்டும்னு அண்ணிக்காரி ஒத்தாசை பண்ணா. நாங்கூடத்தான் ஒத்தாசை பண்ணேன். இந்த வீட்ல யாருக்குமே தெரியாதுன்னியே. எனக்குத் தெரியும். புவனா பொட்டியைத் தூக்கிட்டுப் போவச் சொல்ல எங்கால்ல வுழுந்து ஆசீர்வாதம் வாங்கிட்டுத்தான் போச்சி. அவ நம்பி மோசம் போய்ட்டு வந்துட்டா. அதுக்கு நந்தினி என்ன பண்ணுவா? நாந்தான் என்ன பண்ணுவேன்?''

''அதுக்கில்ல பாட்டி. இப்பப் புவனாவைப் பொண்ணு பாக்க வர்றவங்க கிட்டல்லாம் என் நாத்தனார் கெட்டுப் போய் வந்தவன்னு நந்தினி எல்லாரையும் கலைச்சி விடறாளே. அந்தக் கோவத்துலதான்...''

''கோவமாம், பொடலங்கா. நாளைக்குப் புவனா கட்டிக்கிட்டுப் போன பிற்பாடு மாப்பிள்ளைப் பையனுக்கு விஷயந் தெரிஞ்சா என்ன பண்ணுவான்? தலை மயிரைப் புடிச்சி செவத்துல இடிக்க மாட்டான்? ஏன்டி சொல்லலேன்னு அடிக்க மாட்டான்? அந்தப் பொண்ணு தலைல சிமெண்ணெய் ஊத்திப் பத்த வச்சிட்டான்னா... ஐயோன்னா வருமா? அப்பான்னா வருமா போன உசிரு. அதுக்குத்தான் முன்னாலேயே சொல்லிடறது நல்லதுன்னு சொல்லுது நந்தினி. ஆயிரம் ஆம்பிளைங்கள்ல ஒரு நல்லவனாவது இருக்க மாட்டானா? அவன் மனசார புவனாவைக் கட்டிக்க மாட்டானான்னு ஒரு ஆசை. இதைக் கூட புவனா சொல்லித்தான் நந்தினி செய்றா. எடுத்தேன், கவுத்தேன்னு நடந்துக்கறதுதான் ஒன் வேலை. இப்ப இவளை வூட்டை வுட்டுப் போவச் சொல்றே. எங்கே போவா? என்ன பண்ணுவா? ஏதாவது யோசிச்சியா நீ? ஏங்க. பேசறதெல்லாம் காதுல வுழுவுதா இல்லையா? நீங்க

சுபா

பாட்டுக்கு ரயிலு மாதிரி மைல் நீளத்துக்குப் பொகை வுட்டுக்கிட்டு இருந்தா என்ன அர்த்தம்? வூட்டுக்குப் பெரிய தலை. இந்த நேரத்துல கூட போ லைன்னா எப்படி?''

''டேய், தேவராஜி. பட்டு சொன்னா நியாயம் இருக்கும். நீ பாட்டுக்கு ஓஹராதே. கெழவிக்குக் கோவம் வராது. வந்தா தப்பான கோவமா இருக்காது. நந்தினி நீ உள்ளே போம்மா.''

''அதை தேவராஜி சொல்லட்டும்'' என்றாள் பாட்டி உறுதியான குரலில்.

''நந்தினி. ஐ'ம் ஸாரி. திடீர்னு கோவத்தில பேசிட்டேம்மா. மனசுல வெச்சிக்காத. நான் சொன்னது தப்புத்தான். உள்ளே போ. எனக்கு ஒரு நல்ல காப்பி கலந்து எடுத்துக் கிட்டு வா. எம்மேல கோபமா இருந்தா காப்பில சர்க்கரை போடாதே.'' தேவராஜ் நந்தினியை அடைந்து அவள் கன்னத்தில் வழிந்த நீரைத் துடைத்துவிட்டுக் கொண்டே சொன்னான்.



''சும்மா சொன்னா எப்படி? கால்ல வுழுந்து சொல்லுடா.''

''சும்மா இருங்க பாட்டி. அவரைப் போய் என் கால்ல விழச் சொல்லிக்கிட்டு. எனக்கு ஒண்ணும் உங்க மேல கோவம் இல்ல. சக்கரை போட்டே காப்பி கொண்டு வரேன். புவனாவுக்கு இப்படியாய்டிச் சேன்னு நெனைச்சதாலத்தான் எனக்கு அழத் தோணிச்சி. பாட்டி கெடக்கறாங்க...'' என்று சொல்லிவிட்டு நந்தினி முகத்தில் புன்முறுவலுடன் சமையலறை நோக்கிப் போனாள்.

''பார்த்தியாடா தேவராஜி. நீ கால்ல வுழணும்னு சொன்னவுடனே நந்தினி நடந்ததை மறந்துட்டா பாரு. அவ சகஜமாவணும்னுதான் நான் அப்படிச் சொன்னேன். பொண்டாட்டி கால்ல வுழச் சொல்லிட்டே னேன்னு, நீ எம்மேல பாயாதேடா, என் ஆம்பிளைச் சிங்கம்!''

தாத்தாவும், தேவராஜும் பாட்டியை பிரமிப்புடன் பார்த்தனர்.

சென்னை நெருங்கிக் கொண்டிருந்தது.

ரயிலின் கடக், கடக்கினாலோ, இல்லை கொஞ்ச நாட்களாகப் பிரிந்திருந்த சென்னையை மறுபடியும் பார்க்கப் போகிறோம் என்ற ஆவலினாலோ தெரியவில்லை; நந்தினிக்கு அதிகாலையிலேயே விழிப்பு வந்துவிட்டது. எழுந்து உட்கார்ந்தாள். நடு பர்த் தலையை இடித்தது. கொஞ்சம் குறுகிக் கொண்டு உட்கார்ந்தாள்.

கடக்-கடக். கடக்-கடக்.

ரயில் வெகு விரைவாக ஓடியது. நடு நடுவே பீறிடும் உற்சாகத்தை வெளிப் படுத்துகிற மாதிரி ஹார்ன் இசை வேறு. கீழ் பர்த்தில் புவனா ஒடுங்கிப் படுத்திருந்தாள். அண்ணன் வீட்டுக்குத் தஞ்சம் என்று வந்த பின் புவனா ரொம்பத்தான் மாறிப் போயிருந்தாள். பழைய புவனா இல்லை. பழைய உற்சாகம் இல்லை. தாத்தாவையும் பாட்டியையும் 'ஹனிமூன் கப்பிள்' என்று சொல்லும் கிண்டல் இல்லை. அம்மாவுக்கு உதவி செய்கிறாள்; டைப்ரைட்டிங் போகிறாள். ஷார்ட் ஹாண்ட் பழகுகிறாள். அண்ணன் சொல்லும் புடைவை வாங்கி, அண்ணன் சொல்லும் குங்குமப் பொட்டு இட்டு, அண்ணன் சொல்லும் புத்தகம் படிக்கிறாள். பொங்கி அடங்கிய பால். ஒரு வேளை உள்ளுக்குள் கொதிப்பு இருக்கிறதோ என்னவோ!

இப்போது அண்ணன் சொல்லும் மாப்பிள்ளையின் முன் நமஸ்காரம் பண்ணுவதற்காக சென்னை பையன் வீட்டுக்காரர்கள்

வீட்டு வாசலில் குழந்தை வெகு நேரமாக வீல் வீல் என்று அழுது கொண்டேயிருக்க, தந்தை குழந்தையை எடுத்துக் குலுக்கிக் குலுக்கி 'டேய், கோதண்டராமா, இப்படிப் பொறுமையில்லாம இருக்கலாமாடா? பொறுமை வேணும்டா. பொறுமையா இருந்தாத்தான்டா சோறு கிடைக்கும். இன்னும் கொஞ்ச நாழிதான்டா. சமத்தோல்லியோ! கொஞ்சம் பொறுமையாயிரு'ன்னு திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தார். அவ்வழியே சென்ற ஒரு பெரியவர், "ஏன் சார், பசியால் குழந்தை அழுகிறதுன்னு கூடவா தெரியலை? அதன்விட்டுப் போய் பொறுமை உபதேசம் பண்ணி என்ன பயன்?" என்றார். குழந்தையின் தந்தை சொன்ன பதில்: "குழந்தையை என்னிடம் விட்டு விட்டு என் மனைவி அடுத்த வீட்டுக்காரியுடன் ஷாப்பிங் போய் இரண்டுமணி நேரம் ஆகிறது. பொறுமையைப் பற்றிக் குழந்தையிடம் நான் ஒன்றும் சொல்லவில்லை; எனக்கு நானே பேசிக் கொண்டேன்; அவ்வளவுதான். என் பெயர் கோதண்டராமன்!"



– பல ஆண்டுகளுக்கு முன் அண்ணாசாமி பாகவதர் நிகழ்த்திய ஹரிகதை நிகழ்ச்சியில் கேட்டது.

- டி. என். மகாலிங்கம்

"அமைச்சருக்கு என்ன மனு எழுதியிருக்கே?"

"அவரவர் வீட்டு ரேஷன் அரிசியில் உள்ள நெல்லையும் கல்லையும் பொறுக்க எல்லாருக்கும் ஒருநாள் அரசாங்க விடுமுறை அளிக்கணும்னுதான்!"

- திருச்சி ஸ்ரீராம்



பெண்ணை மெட்ராஸில் வைத்துத்தான் பார்க்க முடியும் என்று சொல்லி விட்டார்கள். சார்ட்டர்ட் அக்கவுண்ட்டன்ட் பையன். தேவராஜ் ஒத்துக் கொண்டு விட்டான். சென்னை பயணம்.

மேல் பர்த்தில் லேசான குறட்டையுடன் தேவராஜ் உறக்கம். சென்னையின் பழகின, பழைய காட்சிகள் எல்லாம் நந்தினிக்கு சந்தோஷத்தை அளித்தன.

கூடவே புவனா பற்றிய கவலையும். கல்யாணி தன் வீட்டில் வந்து இறங்கும்படி வருந்திக் கேட்டுக் கொண்டிருக்கிறாள். அவள் உடன் இருந்து பண்ணிவைத்த கல்யாணம் இப்படி ஊர் சிரிக்கும் படி ஆகிவிட்டது என்பதில் அவளுக்கு மிக வருத்தம். ஒரு பிராயச்சித்தமாக புவனாவின் 'பெண் பார்க்கும் படலமாவது தன் வீட்டில் நடக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறாள். அவள் வீட்டில் பெண் பார்க்கும் படலம் நடந்து விட்டால் அது கல்யாணியின் பிராயச்சித்தமாகிவிடும். தன் பிராயச்சித்தம் என்னவென்றுதான் நந்தினிக்குப் புரியவில்லை. புவனாவின் வாழ்க்கை கெட்டதற்கு நானும் ஒரு காரணம் தானே. ஷ்யாம் சுந்தரை நம்பி அவளை அவனுடன் அனுப்பி வைத்தது நான்தானே? கசாப்புக் கடைக்காரனிடம் போய் ஆட்டை ஒப்படைத்த மாதிரி....

நந்தினியால் நினைவின் பாரத்தைத் தாங்க முடியவில்லை. தலையை ஒரு முறை சிலிர்த்துக் கொண்டாள். வெளியே பார்த்தாள். பெரம்பூர் ரயில்வே ஸ்டேஷன் கடந்து கொண்டிருந்தது. ஸ்டேஷன் விளிம்பிற்கு அப்பால் சாலை தெரிந்தது. பஸ் ஸ்டாண்டில் மக்கள் தெரிந்தார்கள். காலை நேரக் காய்கறிக் கூடைகள் இறங்கிக் கொண்டிருந்தன. ஏதோ ஒரு காம்பவுண்ட் சுவரில் சினிமா போஸ்டர்கள் அப்பிக் கொண்டிருந்தன. இன்றே பாருங்கள். இளம்புயல் இயக்குனர் அருண்குமாரின் நனைந்த ஓவியம்.

இளம்புயல் இயக்குனர் அருண்குமார். நனைந்த ஓவியம்!

அருண்குமாருக்கு அதற்குள் பட்டம் கிடைத்து விட்டது. இளம்புயல். இரண்டு முறை சொல்லிப் பார்த்துக் கொண்டாள். நன்றாகத்தான் இருந்தது. 'படம் தயாரித்தாகிவிட்டது. ஒரு வாரத்தில் ரிலீஸ். மெட்ராஸ் வாருங்கள். தனிக்காட்சிக்கு ஏற்பாடு பண்ணியிருக்கிறேன்' என்று அவன் பெங்களூர் வரை வந்து அழைத்தான்.

நந்தினிதான் மறுத்து விட்டாள். ஏற்கெனவே தேவராஜ் அவளை ஒரு மாதிரி பேசி விட்டான். வீட்டை விட்டு வெளியே போ என்ற லெவல் வரை வந்து விட்டான். அருண்குமாரை உதாசீனப்படுத்தக் கூடாது என்னும் நாகரிகத்திற்காகப் படம் பார்க்க வென்று மெட்ராஸ் வந்து.... அவன்

"நீங்க மாப்பிள்ளை வீட்டுக்குச் சொந்தக்காரரா, பெண் வீட்டுக்குச் சொந்தக்காரரா?"

"நீங்க போட்டிருக்கிற செருப்புக்குச் சொந்தக்காரர்."

- சந்திரன்மதி



இருப்பது சினிமாவில். வெற்றி பெறத் துடிப்பவன். ஏதாவது ஒரு ஆர்வ நிருபன் அவன் பழைய வாழ்க்கையைக் கிளறிப் பார்த்து, சாம்பல் பூத்த தணலைக் கண்டு பிடித்துவிட்டால்?

நினைக்கவே பயமாயிருந்தது.

''வேண்டாம் அருண். படம் பெங்களூருக்கு வர்ரப்ப பாத்துக்கறேன்'.

'ஏன்?'

'ஓங்களுக்குச் சிரமம்.'

'எனக்கு எந்தச் சிரமமுமில்லை.'

'இல்ல அருண். இப்ப தேவராஜ் இல்லேங்கறதால நான் ஃபீல் பண்றதைச் சொல்லிடறேன். நான் ராசியில்லாதவ. லவ் பண்ணேன். நடக்கலை. நான் புகுந்த வீட்லயும் ரொம்ப முனைஞ்சி ஒரு காரியம் பண்ணேன். தோத்துப் போய்ட்டேன். எனக்கு எம்மேலயே பயமாயிருக்கு. நீங்க நல்லா முன்னுக்கு வரணும். வேண்டாம்.'

'எனக்கு அந்த மாதிரி செண்டிமெண்ட்டெல்லாம் இல்ல நந்தினி.'

'எனக்கிருக்கு. வற்புறுத்தாதீங்க. படம் ரிலீசானப்புறம் நான் பாக்கறேன்.'

கிட்டத்தட்டக் கத்திரித்து அனுப்பினாள். இங்கே இளம்புயல் ஆகியிருக்கிறான். படம் எப்படி ஓடுகிறது என்று அவளுக்குத் தெரியவில்லை. பெங்களூரில் எப்படித் தெரியும்? அதுவும் வீட்டை விட்டு வெளியே போகாதவளுக்கு! படம் வெளிவந்து இரண்டு வாரமாகியிருக்கும் இல்லையா? இந்நேரம் அதன் வெற்றி தோல்வி தெரிந்திருக்கும் இல்லையா? கடவுளே. அருண்குமார் வெற்றி பெற வேண்டும். அவன் வாழ்க்கை அர்த்தமுள்ளதாக வேண்டும்.

''என்ன நந்தினி? உக்காந்துக்கிட்டே கனவா? மெட்றாஸ் வந்தாச்சி'' என்ற கணவனின் குரல் கேட்டு, நந்தினி திடுக்கிட்டுப் பார்த்தாள். வண்டி ஸ்டேஷனில் நுழைந்து கொண்டிருந்தது. நந்தினி வெட்கப்பட்டு எழுந்து, இன்னும் தூங்கிக் கொண்டிருந்த புவனாவை எழுப்பினாள்.

"எல்லாம் சரிதான். பொண்ணுக்கு என்னவோ ஜலதோஷங்கற மாதிரில்ல சொல்றீங்க,'' என்றாள் பையனின் அம்மா. ஒரு சாண் அகலத்திற்குப் பட்டுப் புடைவை. முகத்தில் அங்கங்கே சதை கூடியிருந்தது. கண்களுக்குக் கீழே. கன்னங்களில், முகவாயில், கழுத்தில்.

நந்தினி அவளிடம் ரகசியமாய்ச் சொன்ன செய்தியை, எட்டுக்கட்டைக் குரலில் வந்து ஒலிபரப்பினாள். பெண் பார்க்க வந்த குடும்பம் விக்கித்துப் போய்ப் பார்த்தது. பையனின் அப்பா அடங்கியிருந்தார்.

கல்யாணி கை பிசைந்தாள். நந்தினி தரையில் விழுந்த மீன் சுவாசத்திற்குத் தவிக்கிற மாதிரி தவித்தாள். தேவராஜ் இறுகின முகத்துடன் இருந்தான். புவனா நமஸ்கரிக்கக் குனிந்தவள், நிமிராமல் குனிந்தபடியே உட்கார்ந்திருந்தாள்.

''எம் பையன் ரொம்ப நாளா ஒரு அபலைப் பெண்ணுக்கு வாழ்வு குடுக்கணும்ன்னுதான் சொல்லிக்கிட்டிருந்தான். ஏண்டா தனபாலு?''

''ஆமாம்மா.''

பாலைவனத்தில் தாகத்தில் தவித்துக் கொண்டிருந்தவளுக்கு எதிரே நீரூற்றே பீறிட்டுக் கொண்டிருப்பதைக் கண்டு விட்ட மாதிரி பட்டது நந்தினிக்கு.

''இந்தப் பெண்ணே எங்க வீட்டு மருமவளா வரட்டும். இந்த மாதிரி அழகு அடக்கத்தோட ஒரு பொண்ணுகெடைக்கறது பெரிய விஷயம். ஏண்டா தனபாலு?''

''ஆமாம்மா.''

தேவராஜ் சிரிப்புத் துலங்க அந்த அம்மாவைப் பார்த்தான். கல்யாணி நந்தினிக்கு மட்டும் தெரிகிற மாதிரி தன் கட்டை விரலை உயர்த்தி மகிழ்ச்சியை வெளிப்படுத்தினாள். குனிந்த புவனா நிமிர்ந்தாள். அவள் உதடுகளை ஒரு புன்னகை கீறிப் பிளந்திருந்தது.

''ஆனா ஒண்ணு....'' என்று சொல்லிப் பையனின் அம்மா வெற்றிலை பாக்கு எச்சிலைத்துப்பி விட்டு வர ஜன்னல் பக்கம் போனாள்.

இதயங்களில் சம்மட்டி ஒலிக்க அவர்கள் காத்திருந்தார்கள்.

(தொடரும்)

## அட, அப்படியா!



# ஷெர்லாக் ஹோம்ஸின் சினிமா சாதனை!

!! எகிப்திலுள்ள 'சியாப்ஸ்' பிரமிட்டின் அடித்தளம் பத்து கால்பந்தாட்ட மைதானங்களின் பரப்பளவுக்குச் சமானமானது. அந்த பிரமிட்டை அமைப்பதற்கு 4,00,000 ஆட்கள் இருபது ஆண்டுகள் உழைத்ததாக வரலாறு.

!! சாலைகள் அமைப்பதில் முன்னோடியாக விளங்கியவர்கள் ரோமர்கள். All roads lead to Rome என்ற பழமொழி எழுந்தது இதனால்தான். கி.பி. நான்காம் நூற்றாண்டில் ரோம சாம்ராஜ்யம். வீழ்ந்த போது சுமார் 80,000 கி. மீ. நீளத்துக்கு ஐரோப்பிய, மத்திய கிழக்கு நாடுகளை இணைக்கும் சாலைகள் போடப்பட்டிருந்தன.



!! எஸ்செக்ஸில் (பிரிட்டன்) கண்டெடுக்கப்பட்ட ஓர் உடைந்து போன மர வேல்தான் உலகின் மிகப் பழைய ஆயுதம். இது கி.மு. 2,00,000 ஆண்டில் வடிவமைக்கப்பட்டதாகக் கருதப்படுகிறது.

!! நீர்யானையின் வியர்வை சிவப்பு நிறமாக இருக்கும். அதில் ஹெமோகுளோபின் எனப்படும் சிவப்பணுக்கள் கலந்து வெளிப்படுவதே இக் காரணம்.

!! மனித உடலின் ஒரு 'செல்லில் 10,000 முதல் 1,00,000 வரை சங்கேதக் குறிப்புகள் காணப்படுகின்றன. இவற்றைத் தான் ஜீன் என்கின்றனர். இந்தக் குறிப்புக்களை வார்த்தைகளாக 'மொழி' பெயர்த்து எழுதினால் என்சைக்ளோபீடியா பிரிட்டானிகாவின் ஒரு பாகம் போன்ற தடிமனான பத்தாயிரம் புத்தகங்களை நிரப்பலாம்.

!! மனித உடலின் மிகப் பெரிய 'செல்' பெண்ணின் கரு முட்டை. இதன் விட்டம் $\frac{1}{180}$ அங்குலம். மிகச் சிறியது; ஆண் விந்து 'செல்'. 1,75,000 விந்து செல்கள் சேர்ந்தால் ஒரு கரு முட்டையின் எடையளவு இருக்கும்.

!! 1908 முதல் 1913 வரை 450 திரைப் படங்களைத் தயாரித்த சாதனையாளர் ஹாலிவுட் இயக்குனர் டி.டபிள்யூ கிரிஃபித்.

!! சினிமா திரையில் மிக அதிகமான முறை தோன்றியுள்ள கதாபாத்திரம் ஷெர்லாக் ஹோம்ஸ். 1900 முதல் 1980 - ம் ஆண்டு வரை அறுபத்தோரு நடிகர்கள் அப்பாத்திரத்தில் நடித்தனர். 175 படங்களில் 'ஹோம்ஸ்' தோன்றினார்.

!! ஆங்கிலக் கவி டென்னிஸன் தமது பத்தாவது வயதில் 6,000 சொற்கள் கொண்ட ஒரு கவிதையை எழுதினார்.

!! மிக நீண்ட காலத்துக்கு ஒரு பத்திரிகையின் ஆசிரியராக விளங்கி உலகச் சாதனை புரிந்தவர் எம்.எஸ். கிருஷ்ணாராவ். மைசூர் நகரில் வெளியாகும் 'சத்கவாடி' இதழின் ஆசிரியராக 1917 முதல் 1981 வரை ($63\frac{1}{2}$ வருடங்கள்) பணியாற்றினார் இவர்.

தொகுப்பு : உதய் லால்



சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டி

# பார்க் டவுன் பெனிபிட் பண்டு லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம் துவக்கம் 1985

223, தெற்கு தங்கசாலை வீதி (முதல் மாடி), சென்னை - 600 003. தொலைபேசி: 582676

உங்கள் வசதிக்கேற்றவாறு பயனடைய பற்பலச் சிறந்த திட்டங்களை அளிக்கும்
மேற்கண்ட நிறுவனத்தில் உறுப்பினராகுங்கள்.

பிக்சட் டிபாசிட் திட்டம்

| 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5 | 19% | 20% |

• தனயோகம டிபாசிட் திட்டம் - வட்டி வீதம் 20%

குறைந்த அளவு டிபாசிட் ரூ.20,000/- காலம் 5 ஆண்டுகள். மாத வட்டிக்கான
செக்குகள் முன் கூட்டியே கொடுக்கப்படும்

சேவிங்ஸ் கணக்குகள் மீது 9.5% வரை வட்டி
உங்கள் டிபாசிட்டுகள் 45 மாதங்களில் 2 மடங்காகிறது. 90 மாதங்களில் 4 மடங்காகிறது.

## காமதேனு மாபெரும் திருப்பப் பெறும் திட்டம்

பிரதி மாதம் ரூ.100/- வீதம் தொடர்ந்து 15 வருடம் செலுத்துவீர்
5 ம் ஆண்டு முடிவில் ரூ.6000/-ஐத் திரும்பப் பெறுவீர்
10 ம் ஆண்டு முடிவில் மீண்டும் ரூ.6000/- ஐத் திரும்பப் பெறுவீர்
15ம் ஆண்டு முடிவில் மிகப் பெருந்தொகையாக ரூ.50,000/- பெறுவீர்.

## பென்ஷனர் நலத்திட்டம்

முதியோருக்கென்றே அளிக்கப்படும் திட்டம்
சேமிப்பு ரூ. 13,000/- வட்டி வீதம் - 19% கால வரம்பு 12 மாதங்கள் மட்டுமே
முன்னதாகவே பெறும் சலுகைகள், விதவைகளும், உடல் ஊனமுற்றோர்களும்
மற்றும் கல்வி, சமய அறக்கட்டளைகளும் சேர்ந்து பயன் பெறலாம்.

ரெக்கரிங் டிபாசிட் திட்டம்

| பிரதி மாத டிபாசிட் | ரூ. 25/-ம் அதன் பெருக்கமும் பெற்றுக் கொள்ளப்படும் மாதங்கள் முடிவில் கிடைக்கும் தொகை | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | 12 * | 24 | 36 | 48 | 60 | 72 | 84 |
| ரூ. 25 | 330 | 715 | 1,180 | 1,800 | 2,510 | 3,350 | 4,370 |
| ரூ. 100 | 1,320 | 2,860 | 4,720 | 7,200 | 10,050 | 13,400 | 17,500 |

## செல்வக்களஞ்சியம் டிபாசிட் திட்டம்

உங்கள் குழந்தையைக் குபேரனாகக் காண ஆசையா! இதோ
ரூ.7500/-ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ.1,20,000/- பெறலாம்.
ரூ.9000/-ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ.1,44,000/- பெறலாம்.

கடன் வேண்டுமா? எங்களை அணுகுங்கள். நகைக்கடன் சவரனுக்கு ரூ.2400/- வட்டி விகிதம் ரூ.1.85
கடனுக்கு உச்சவரம்பு இல்லை. தருவதில் தாமதமில்லை.. R.D. கட்ட வேண்டியதில்லை...

*கௌரவ ஆலோசகர்:*
P.பாலசுப்ரமணியம், B.Sc.
முதன்மை அறங்காவலர்,
கந்த கோட்டம், சென்னை - 3.

இயக்குநர் குழுத் தலைவர்
R.விவேகாநந்தன் B.Com.

*பங்குதாரர்களுக்கு மட்டும்.*

Business Hours: Week Days 8.30 a.m. to 12.30 p.m. & 2.00 p.m. to 6.00 p.m. Sunday 8.30 a.m. to 12 noon.
Friday Weekly Holiday.




திரும்பிப் பார்க்கிறேன் – 41

# சிவாஜிக்கு ஆபத்து!

**க**தைப்படி சிவாஜி ஒரு புரட்சி வீரன். நாட்டை ஆளும் திவானால் மக்கள் அவதிப்பட, அவனை எதிர்த்து மக்களை ஒன்றுபடுத்தி, புரட்சிக்கு வழிவகுப்பவன். சிவாஜியையும் மக்களையும் மிரட்டி, அடக்கி ஒடுக்கத் திட்டமிடும் திவான், ஹெலிகாப்டரில் பறந்து வந்து குண்டு வீசுகிறார்!

இந்தக் காட்சிக்குத்தான் எனக்கு ஒரு ஹெலிகாப்டர் தேவைப்பட்டது. கேமிரா மேன்களோடு கலந்தாலோசித்த போது, திவான் குண்டு வீசும் காட்சியை, காமிராக் குழு மற்றொரு ஹெலிகாப்டரில் பறந்தபடி படமெடுத்தால்தான் சிறப்பாக இருக்கும் என்று முடிவாயிற்று.

ஆக, பம்பாயில் கம்பாட்டா ஏர் சர்வீஸ் என்ற நிறுவனத்துடன் பேசி, இரண்டு ஹெலிகாப்டர்களை அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொண்டேன். ஆனால் நான் ஷெட்யூல் செய்திருந்த ஷூட்டிங் தினத்தில் தம்மால் அனுப்பி வைக்க முடியாது என்று அந்த நிறுவனத் தலைவர் சொன்னார். ஏற்கெனவே வேறு பணிகளுக்காக அவை 'புக்' ஆகியிருந்தன.

நான் ஒரு திரைப்பட ஷூட்டிங்குக்காகக் கேட்கிறேன் என்பது புரிந்ததும் அந்த நிறுவனத் தலைவர், புதுமையான முயற்சியை வரவேற்று யோசனையும் சொன்னார். அதாவது, ஷூட்டிங்குக்கு என்று பிரத்யேகமாக இரு ஹெலிகாப்டர்களை அனுப்புவது என்றால் போக வர செலவே எக்கச்சக்கமாக ஆகும். ஆனால் பயிர்களுக்குப் பூச்சி மருந்து அடிக்கும் பணி நிமித்தம் இரண்டு ஹெலிகாப்டர்கள் தமிழ் நாட்டுக்கு வருகின்றன – அதிர்ஷ்டவசமாக. அவற்றின் பணி முடிந்ததும் ஷூட்டிங்குக்கு அவற்றைப் பயன்படுத்திக் கொண்டால் போக்குவரத்துச் செலவு மிச்சப்படும். ஹெலிகாப்டர் வாடகை மட்டும் கொடுத்தால் போதும். இதற்கு ஏற்ப ஷூட்டிங் ஷெட்யூலை மாற்றி, புதிய தேதி குறிக்க வேண்டும்.

நான் குறித்த தேதியில் ஹெலிகாப்டர்கள் கிடைக்காத போது அட்ஜஸ்ட் பண்ணிக் கொண்டுதானே போக வேண்டும்? மேலும் செலவும் கணிசமாக மிச்சமாகிறது. எனவே, யூனிட்டில் அனைவரிடமும் பேசிப் புதிய தேதிக்குச் சம்மதம் பெற்று, குறிப்பிட்ட காட்சியை எடுக்க செங்கல்பட்டு அருகே லொகேஷன் தேர்ந்தெடுத்து, மற்ற எல்லா ஏற்பாடுகளையும் செய்து விட்டுக் காத்திருந்தேன்.



**அ**ப்போது தான் அதிர்ச்சி அளிக்கும் அந்தத் தந்தி வந்தது!

இரண்டு ஹெலிகாப்டர்களில் ஒன்று, தாழ்வாகப் பறந்து பூச்சி மருந்து தெளிக்கும் பணியில் ஈடுபட்ட போது, மின்கம்பியில் பட்டதன் விளைவாக விபத்துக்கு உள்ளாகியதோடு அந்த ஹெலிகாப்டரின் பைலட்டும் ஸ்தலத்திலேயே மரணமடைந்து விட்டார்!

செய்தியை அறிந்ததும் என் மனத்தில் சோகம் கவ்விக் கொண்டது. கூடவே, 'நிலைமையை எப்படிச் சமாளிப்பது?' என்று அடுத்த கேள்வியும் எழுந்தது. ஹெலிகாப்டர் நிறுவனம், 'பாக்கியுள்ள ஒரு ஹெலிகாப்டரை வைத்துச் சமாளித்துக் கொள்கிறீர்களா? அல்லது பம்பாயிலிருந்து இன்னொரு ஹெலிகாப்டர் அனுப்பவா?' என்று கேட்டிருந்தது.

நான் பார்ட்னர்களைக் கலந்து ஆலோசித்த போது மேலும் குழப்பம்தான் ஏற்பட்டது. ஒருவர், 'அபசகுனம் மாதிரி இருக்கு; ஹெலிகாப்டர் காட்சியே வேண்டாம்' என்

றார். இன்னொருவர், 'இப்போ வேண்டாம்; மற்ற காட்சிகளையெல்லாம் எடுத்து விட்டுக் கடைசியில் பார்த்துக் கொள்ளலாம்' என்றார். மூன்றாவதாக ஒருவர், 'திட்டமிட்டபடியே செய்யலாம்; ஆனால் ஒரு ஹெலிகாப்டர் போதும். சமாளிக்கலாம்' என்றார்!

மூன்று வகை யோசனைகள் மூளையைக் குழப்ப, நான் தனிமையில் யோசித்தேன். முன்வைத்த காலைப் பின் வைப்பது எனக்கு எப்போதுமே பிடிக்காத ஒன்று. அதனால் நன்கு சிந்தித்து, 'மூன்றாவது யோசனையைப் பின்பற்ற முடியுமா?' என்று காமிராமேன்களைக் கலந்தாலோசித்தேன். அவர்கள், 'இரண்டு ஹெலிகாப்டர்கள் இருந்தால் பலவித கோணங்களில் படம் பிடிக்கும் வசதி உண்டு; இப்போ வாய்ப்புக்கள் குறைவாகத்தான் இருக்கும். என்றாலும் இப்போதுள்ள சூழ்நிலையில் என்ன செய்வது? ஒரு ஹெலிகாப்டரே போதும். நன்கு திட்டமிட்டு, முடிந்த மட்டும் சிறப்பாக எடுக்கலாம்' என்றனர். நானும் இந்த முடிவுக்கே வந்திருந்தேனாதலால் பம்பாய்க்கு ஃபோன் செய்து 'ஒரு ஹெலிகாப்டர் போதும் அனுப்பி வையுங்கள்' என்றேன். இன்னொரு ஹெலிகாப்டர் கேட்டால் ஷூட்டிங் தேதியை மறுபடி ஒத்திப் போடவும் நேரலாம். அதனால் விளையும் புதிய சிக்கல்கள் வேறு! இதையெல்லாம் தவிர்க்கவும் விரும்பினோம்.

ஒரு பைலட், (இவரை 'காப்டன்' என்றுதான் கூப்பிடுவது வழக்கம்) ஒரு நாவிகேட்டர் (வழிகாட்டி) என்று இருவர் அடங்கிய குழு ஹெலிகாப்டருடன் வந்து சேர்ந்தது. மீனம்பாக்கத்தில் வந்து இறங்கிய சில மணி நேரங்களுக்குள் அந்த காப்டன் எனக்கு ரொம்ப நண்பராகி விட்டார். அவர் பெயர் யாதவ். முப்பது வயது இளைஞர். Very smart and handsome. படப்பிடிப்புக்காக ஹெலிகாப்டர் செலுத்துவது அவருக்குப் புது அனுபவம். அதனால் எதிர்பார்ப்புடனும் உற்சாகமாகவும் இருந்தார்.

படப்பிடிப்புக்கான லொக்கேஷனில் போய் ஹெலிகாப்டரில் இறங்கியதும் சுற்றிலும் மலைகள் சூழ்ந்த அந்த இடத்தைப் பார்த்து அசந்து போய் விட்டார். நானும் கேமிராமேன்களும் காப்டனிடம் எத்தகைய ஒத்துழைப்பை எதிர்பார்க்கிறோம் என்பதை விரிவாக விளக்கினோம். 'ஓ.கே! டன்!' என்று கூறி, கைகுலுக்கினார் மிஸ்டர் யாதவ்.

மொத்தம் நாலு நாட்கள் படப்பிடிப்பு நடந்தது. அப்போது நடந்த ஒரு சம்பவத்தை எண்ணினால் எனக்கு இப்போதும் இதயத் துடிப்பு அதிகமாகும்; மெய்சிலிர்க்கும். குண்டு வீசும் காட்சியில், ஒரு கட்டத்தில் ஹெலிகாப்டர் மிகவும் தாழ்வாகப் பறந்து, சிவாஜியைத் துரத்துகிறது! சிவாஜி ஓடுகிறார்! காமிரா இதைப் படம் பிடித்துக் கொண்டிருந்த போது, எனக்கு, ஹெலிகாப்டர் தேவைக்கு அதிகமாகவே தாழ்வாகப் பறப்பதாகத் தோன்றியது! அடுத்த சில நொடிகளில் சிவாஜியின் தலையை உரசி விடவும் கூடும்! படப்பிடிப்புக் குழுவினர் எல்லோருமே என்னைப் போல் 'ஓ'வென்று அலற, ஹெலிகாப்டர் போட்ட சத்தத்தில் அது சிவாஜி காதில் விழவும் இல்லை!

சிவாஜி, நடிக்க ஆரம்பித்தால் தம்மை மறந்து விடுவதுதான் வழக்கம். ஆனால் யார் செய்த புண்ணியமோ, அன்று நடிப்பை மறந்து ஒருகணம் திரும்பிப் பார்த்தார். ஹெலிகாப்டர் மிகத் தாழ்வாகப் பறப்பதைக் கண்டு அடுத்த கணத்தில் தரையில் விழுந்து உருண்டார். உயிர் தப்பிப் பிழைத்தார்! அன்று அவருக்கு ஏதாவது நேர்ந்திருந்தால்... எண்ணிப் பார்த்தாலும் உடல் நடுங்குகிறது. கலை உலகுக்கு எப்பேர்ப்பட்ட நஷ்டமாகியிருக்கும்! எத்தனை ஏச்சுப் பேச்சுக்கள் என்னைச் சூழ்ந்திருக்கும்! இறையருள்தான் சிவாஜியையும் யூனிட்டில் இருந்த எங்கள் அனைவரையும் காப்பாற்றியது என்று நம்புகிறேன்.

ஷூட்டிங் ஆரம்பித்துச் சில மணி நேரத்துக்குள் ''பிரதர், பிரதர்'' என்று என்னை அழைக்கும் அளவுக்கு நெருங்கி வந்து விட்டார் அந்த பைலட். திருநெல்வேலியில் பூச்சி மருந்து தெளிக்கும் போது விபத்துக்குள்ளான அவரது சகா பற்றி வினவிய போது, ''பூச்சி மருந்து தெளிக்கும் இது மாதிரி நவீன வசதியில்லாத சிறிய ஹெலிகாப்டர்களை இயக்கும் போது, வெகு தாழ்வாகப் பறப்பதினால் மின்சாரக் கம்பிகளின் மீது பட்டோ, மரங்களின் மீது மோதியோ, இப்படிப்பட்ட ஹெலிகாப்டர்கள் விபத்திற்குள்ளாவது சகஜம். என் நண்பர்களான பல பைலட்டுகள் இப்படி துரதிர்ஷ்டவசமாக மரணமடைந்திருக்கின்றனர். யார் கண்டது? என் முடிவு கூட இப்படிப்பட்ட ஒரு சோகக் கதையாக அமையலாம்!'' என்றார் மிஸ்டர் யாதவ்.

நான் பதறிப் போய், ''பிரதர்! இப்படியெல்லாம் அச்சானியமாகப் பேசாதீர்கள். நீங்கள் நீண்ட ஆயுளுடன் ஆரோக்கியமாகப் பல்லாண்டு வாழ்வீர்கள்'' என்றேன்.

ஐயோ! என் வாழ்த்து பலித்திருக்கக் கூடாதா! பலிக்க முடியாதபடி விதி சதி செய்து விட்டதே!

டைரக்டர் ஸ்ரீதர்

# ஒவ்வொர் அமைச்சரும் படிக்க வேண்டும்!

◆ 'நிதமைக்குத் தண்டனை!' தலையங்கம் என்னைப் போன்று மனத்திற்குள் புழுங்கிக் கொண்டிருந்த மாணவர்களுக்கு ஆறுதலாய் இருந்தது.
சென்னை - 101,
பா. ராமனாதன்.

◆ தமக்குக் கிடைக்கவில்லை என்ற ஒரேயொரு காரணத்திற்காக அந்த கஸ்டம்ஸ் அதிகாரி பொம்மையை அக்குவேறு ஆணி வேறாகப் பிரித்த போது, இனியாவின் அப்பாவோடு சேர்ந்து நானும் கண்கலங்கி விட்டேன்.
வேலூர்,
வடமாலவன்.

◆ ஜால்ரா போடும் எம். எல். ஏக்களுக்கு மந்திரிவ் முதல்வருடன் மோதிய எம். எல். ஏ. டாக்டர் செல்லக் குமாரைப் பாராட்டாமல் இருக்க முடியவில்லை.
திருமருகல், நா. மணி.

◆ 'தண்டிக்கப்படுகிறது எழும்பூர்த் தொகுதி' படித்தேன். 'எல்லாத் தொகுதி மக்களையும் என் சொந்தத் தொகுதி மக்களைப் போல் கருதுவேன்' என்று முதல்வர் ஜெ. ஆரம்பத்தில் சொன்னார். ஆனால் அது வெறும் வாக்குறுதிதான் என்பது இப்போதுதான் புரிகிறது.
இலால்குடி,
எம். இராஜேந்திரன்.

◆ அயனாவரத்தின் மீது ஆட்சியாளரின் கவனத்தை முழுமையாக ஈர்க்கச் செய்து, விரிவான கட்டுரை வெளியிட்டமைக்கு எங்கள் இதயம் கனிந்த நன்றியைத் தெரிவிப்பதோடு, பொன் விழாக் காணும் 'கல்கி' தனது ஒப்பிலாச் சமூக நலப்பணியை மேலும் மேலும் தொடர மனமார வாழ்த்துகிறோம்!
சென்னை - 23,
அயன்புரம்
பொதுநலச் சங்கத்தினர்.

◆ இந்த வார ''ஜெ'' கார்டூனை போஸ்டராகத் தமிழகம் முழுவதும் ஒட்ட வேண்டும்.
கோவில்பட்டி,
அ. ராமகிருஷ்ணன்.

◆ 'ஸ்டாக் இன்வெஸ்டை'ப் பற்றி (உங்கள் செல்வம்) நன்றாக விளக்கப்பட்டிருந்தது. ஆனாலும் ஒரு திருத்தம் : ஒதுக்கப்படாத பங்குகளுக்கான ஸ்டாக் இன்வெஸ்ட்கள் சம்பந்தப்பட்ட வங்கிக் கிளைகளுக்கே திருப்பி அனுப்பப்படுகின்றன. வங்கிதான் முதலீட்டாளர்களுக்குத் தகவல் கொடுக்க வேண்டும் என்பதுதான் இன்றுள்ள நடைமுறை.
கரூர் - 6,
ப. முத்துக்குமாரசாமி.

◆ கா. க. வேலாயுதன் எழுதிய 'அண்ணன் வீட்டுச் சம்பந்தம்' சிறுகதை, படிப்பவர் இதயத்தைப் பிழிவதும்படி எழுதப்பட்டுள்ளது!
கரடிபாவி,
பூ. பெருமாள்சாமி.

◆ கல்லூரி மாணவ - மாணவிகள் நடத்திவரும் காந்திஜி சமூக சேவை மையத்தின் சேவைகளைப் படித்து மகிழ்ந்தேன். மையத்தின் சேவை வளர வாழ்த்துகிறேன்!
ரெட்டியார்பாளையம்,
ஜி. ராமநாதன்

◆ ''ஜெ''யின் ஓராண்டுச் சா(வே)தனை'' மிக மிக அருமையான கட்டுரை. பற்பல கோணங்களில் உரிய தலைப்பிட்டு - நியாயமான முறையில் நடுநிலையாக எழுதப்பட்டிருந்தது. கட்டுரையைப் பல முறை படித்தேன்.
திருச்சி, பா. நடராஜன்.

◆ 'ஜெ. ஆட்சியின் ஓராண்டுச் சா(வே)தனை' கட்டுரை, மாண்புமிகு முதல்வர் கவனத்திற்குக் கொண்டு செல்லப்பட வேண்டும். நடுநிலைமையுடன் எழுதப்பட்ட இக் கட்டுரையை ஒவ்வோர் அமைச்சரும் படிக்க வேண்டும். கல்கி ஒரு பொறுப்புள்ள எதிர்க்கட்சியாகச் செயல்படுகிறது என்பதற்கு இது ஒரு எடுத்துக்காட்டு.
இராமநாதபுரம்,
க. இராஜரத்தினம்.

◆ இக்காலத்தில், பத்திரிகைகள், தங்கள் சுயநலம் கருதி, ஆளும் கட்சியைத் துதிப்பதையும், அதன் மூலம், பயனடைவதையும்தான் கண்டுள்ளோம். ஆனால், தங்கள் பத்திரிகை, கட்சி பேதமின்றி, நேர்மையான முறையில், பொது ஜனங்களின் நன்மையைக் கருத்தில் கொண்டு, ஜெ ஆட்சியின் ஓராண்டுச் சாதனைகளையும், வேதனைகளையும் விளக்கங்களுடன் எழுதியிருப்பது மிகவும் வரவேற்கத்தக்கது.
சென்னை - 44,
ஏ. வி. ஸ்ரீனிவாசன்.

◆ 'ஜெ' ஆட்சியின் ஓராண்டு வேதனைகள் பட்டியலிடப்பட்டதைப் படித்தேன். 'செய்தது' 'செய்யத் தவறியது' - 'இனி செய்ய வேண்டியது' என்று ஆக்க பூர்வமாக உங்கள் விமர்சனம் அமையவில்லை. ஆட்சியில் குறைகள் இருக்கலாம். ஆனால் குறைகள் மட்டுமே நிச்சயமாக இல்லை.
சாத்துக்குடி,
ச. மணிவண்ணன்.

◆ எரிபொருள் சிக்கனம், காற்றுத் தூய்மையைக் கருத்தில் கொண்டு மழலையர் முதியோர் விடுத்து ஏனையோர் மிதி வண்டியை ஏற்கச் சொல்லும் நா. மகாலிங்கத்தின் யோசனை மகத்தானது.

கோவை,
கே. ஆர். விஜயா.

வட்டமேஜை

# 15 நிமிடம்

அபர்ணா நாயுடு

டைப் அடிப்பதை நிறுத்திக் கடிகாரத்தைப் பார்த்தாள் கருணா. மணி 10:40.

ஆயிற்று. இன்னும் ஐந்து நிமிடம்தான். சரியாகப் 10:45-க்கு எம்.டி. ரூமுக்குப் போய் அவர் கையெழுத்துக்கு வைக்க வேண்டிய டைப் அடித்த கடிதங்களையெல்லாம் அவர் மேஜையில் வைத்து விட்டு வர வேண்டும்.

சட்டென்று நகம் கடித்து யோசித்தாள்.

அவள் அவருக்கு செக்ரடரியாக வந்து சரியாக ஒரு வருடம் ஆகப் போகிறது. இது நாள் வரையில் அவர் இப்படிச் சொன்னதே



இல்லை. ''ஆச்சா? ஆச்சா?'' என்று இன்டர்காமில் கேட்டு அவசரப்படுத்தி, உடனுக்குடன் கடிதங்களில் கையெழுத்துப் போட்டு விடும் எம். டி. சற்று முன் இன்டர்காமில் அழைத்து ஏன் இப்படிச் சொல்ல வேண்டும்?

''சரியா 15 நிமிடம் கழிச்சு உள்ளே வா. புரியுதா?''

இப்படிச் சொன்ன போது அவர் குரலில் வழக்கத்துக்கு மாறான ஒரு கரகரப்பு - லேசான கரகரப்பு தொனித்தது. அது ஏன்?

நகம் கடித்து யோசித்துக் கொண்டேயிருந்தாள்.

''ஹாய்... ரொம்ப ஆழமான யோசனை போலிருக்கு...''

குரல் கேட்டு நிமிர்ந்த போது பின்னால் யதிராஜன். லேசாக முறுவலித்தான். வாய் தொடர்ந்து சூயிங்கம்மை அரைத்துக் கொண்டிருந்தது.

சிரித்தாள் கருணா. கேட்டாள்.

''ஆபீஸ் தொடங்கி ஒரு மணி நேரம் தான் ஆகுது. அதுக்குள்ளே ஒரு ட்ரிப் வெளியே போய் டீ சாப்பிட்டு வந்தாச்சா?''

''நோ பாரு... இதெல்லாம் மனுஷ பலவீனம். சில பேருக்கு சிகரெட். சில பேருக்குப் புகையிலை. சில பேருக்குப் பொடி. எனக்கு டீயும் சூயிங்கம்மும்.''

சொல்லி விட்டுக் காலால் அவள் மேஜைக்கடியில் இருந்த குப்பைக்

கூடையை வெளியே நகர்த்தினான்.

'ஃபூ!'

அவன் வாயிலிருந்த சூயிங்கம் துப் பாக்கி ரவையாகக் குறிதவறாமல் கூடைக் குள் போய் விழுந்தது.

கடிகாரத்தைப் பார்த்த கருணா அவசர மாக எழுந்தாள். மேஜையிலிருந்த சில காகி தங்களை அள்ளிக் கொண்டு எம். டி. ரூமை நோக்கி நடந்தாள்.

கதவைத் தள்ளித் திறந்து உள்ளே நுழை யும் வரை அவளையே பார்த்தான் யதி ராஜன்.

நுழைந்து ஒரு எட்டு எடுத்து வைத்த கருணா அதிர்ந்து போய் நின்றாள்.

நாற்காலியில் அப்படியே சாய்ந்திருந் தார் எம். டி. அவர் கழுத்தைச் சுற்றி ஒரு நைலான் கயிறு இறுக்கப்பட்டிருந்தது!

**போ**ன் செய்த பத்தாவது நிமிடத் திலேயே இன்ஸ்பெக்டர் வந்து சேர்ந்து விட்டார்.

''போன் செஞ்சது யாரு?''

''நான்தான்.''

பதில் சொன்ன மானேஜர் நமசிவா யத்தை ஆழ்ந்து பார்த்தார். பிறகு பொது வாகச் சொன்னார்.

''நான் இவர்கிட்டே பேசிட்டு அப் புறம் ஒவ்வொருத்தர்கிட்டேயும் பேசறேன். அதுவரைக்கும் யாரும் உங்க சீட்டை விட்டு நகராதீங்க.''

சொல்லி விட்டு நமசிவாயத்துடன் நடந்தார்.

**மா**னேஜர் அறையில்...

''இன்னிக்கு ஆபீசுக்கு வந்ததிலிருந்து என்னென்ன செய்தீங்க? யார் யார்கிட்டே பேசுனீங்க?''

''வந்ததும் முதல்ல எம். டி. அறைக்குத் தான் போனேன். பாங்க் டிரான்ஸாக்‌ஷன்ஸ் சம்பந்தமா பத்து நிமிஷம் பேசினேன்.



''அந்த படத் தயாரிப்பாளர் கை யில ஏன் கட்டுப் போட்டிருக்கார்?''

''அவர் எடுத்த படம் கையைக் கடிச் சுட்டுதாம்.''

- பி.கே. பாலசுப்பிரமணியன்

கிட்டதும் உங்களுக்குப் போன் செஞ் சுட்டுக் காத்திருந்தேன்.''

''நடந்திருக்கறதைத் தெரிஞ்சுக்கிட்டப் புறம் யாராவது வெளியே போய் வந்தாங் களா?''

''ஊகூம். அத்தனை பேரும் அப்படியே அதிர்ந்து போய் உட்கார்ந்துட்டாங்க. அரை மணிக்கொரு தரம் டீ சாப்பிட வெளியே போற யதிராஜன் கூட இடத்தை விட்டு நகரலை.''

ஒரு நொடி யோசித்தார் இன்ஸ் பெக்டர். பிறகு சொன்னார்.

''வாங்க, எம். டி. ரூமுக்குப் போக லாம்.''

**எம்.** டி. யின் அறையில்...

கழுத்தில் கயிறு இறுகியிருக்க, சாய்ந்த நிலையில் இருந்த எம். டி. யின் உடலைப் பரிசோதித்தார் இன்ஸ்பெக்டர். பார்வை அதன் மீதே நிலைத்திருக்க, மானேஜரிடம் கேட் டார்.

''உங்களைத் தவிர வேறே யாரெல் லாம் எம். டி. யைச் சந்திச்சாங்கன்னு தெரி யுமா?''

''கருணாவைத்தான் கேட்கணும். அவ

# நழித்து உள்ளே வா...

திரும்பி என் ரூமுக்கு வந்துட்டேன். அதுக் கப்புறம் இங்கேயேதான், கருணா வந்து விஷயத்தைச் சொல்ற வரைக்கும்.''

''அதுக்கப்புறம்?''

''அவளோட எம். டி. ரூமுக்குப் போனேன். நிலைமையைத் தெரிஞ்சுக்

தான் எம். டி. யோட பர்சனல் செக்ரடரி.''

இன்ஸ்பெக்டரின் பார்வை அறையைச் சுற்றி வந்தது. 'ஹம்' என்கிற ஒலியோடு இயங்கிக் கொண்டிருந்த ஏசி மெஷினைக் கடந்து அதனருகில் அமைந்திருந்த ஜன் னலை அடைந்தது. கம்பிகளில்லாத

ஜன்னல். வெறும் கண்ணாடிக் கதவு மட்டும் தான். அந்தக் கதவும் கொக்கி மாட்டப் படாமல் வெறுமனே சாத்தப்பட்டிருந்தது.

மனத்தில் புகை போல யோசனை படர்ந்தது. நடந்தார். ஜன்னலை அடைந்து அதன் கதவைத் தள்ளித் திறந்தார். வெளியே எட்டிக் குனிந்து பார்த்தார்.

தரையிலிருந்து சுமார் நாலடி உயரத்தில் அமைந்திருந்த ஜன்னல். கீழே ஒரே சீரான இடைவெளியில் வைக்கப்பட்டிருந்த பூந் தொட்டிகள். அதில் ஒன்று - ஜன்னலுக்கு நேர்கீழே வைக்கப்பட்டிருந்தது - சாய்ந்து விழுந்து உடைந்திருந்தது. தொட்டி மண் கறுப்பாக - கட்டி தட்டியாகத் தரையில் சிதறியிருந்தது.

பார்வை அதன் மீதே நிலைத்திருக்க, யோசனை தீவிரமடைந்தது.

பின்வாங்கி ஜன்னலைச் சாத்தினார்.

மானேஜரிடம் கேட்டார்.

''கருணாவைப் பார்க்கலாமா?''

சுருணாவின் மேஜையில்...

எழுந்து நின்ற கருணாவிடம், ''பரவா யில்லை. உட்கார்ந்தே பேசுங்கம்மா'' என்றார் இன்ஸ்பெக்டர்.

குபுக்கென்று அவள் கண்கள் நிறைந்து வழிந்தன.

''யாருக்குமே நல்லதைத் தவிர வேறே எதையும் செய்யத் தெரியாத எம். டி. க்குப் போய் இப்படி ஒரு முடிவா?''

கேட்ட கருணாவை அனுதாபத்தோடு பார்த்தார் இன்ஸ்பெக்டர்.

''ஒருத்தர் மேலே விரோதப்படறதுக்கு எத்தனையோ காரணங்கள் இருக்கலாம். நமக்குத் தெரியலைங்கறதாலேயே அப்படி எதுவும் இல்லைன்னு முடிவு செய்ய முடியாது.''

''இல்லை சார். நேத்து கம்பெனியோட சில்வர் ஜூபிலி ஃபங்ஷன். அதுல மிமிக்ரி செஞ்ச யதிராஜன் எம். டி. யோட குரல்ல விளையாட்டா, 'இந்த வருஷம் உங்களுக் கெல்லாம் இருபத்தஞ்சு பர்சன்ட் போனஸ்'னு பேசினப்போ, சட்னு சிரிக்கக் கிட்டே, 'நானே நினைச்சுக்கிட்டிருந்தேன். அப்படியே செஞ்சுட்டாப் போச்சு'ன்னாரு, சார். அவ்வளவு நல்லவர் அவர்.''

''அது இருக்கட்டும். இன்னிக்கு இது வரை யார் யாரு எம். டி. யைச் சந்திக்க உள்ளே போனாங்க?''

''மானேஜர் மட்டும்தான். வேறே யாரு மில்லை.''

''உனக்குத் தெரியாம யாரும் போயி ருக்க முடியுமா?''

''அப்படி வழக்கமில்லை. அவர் ஃப்ரீயா இருக்காரான்னு என்கிட்டே கேட் டுட்டுத்தான் போவாங்க.''

''வழக்கத்தைப் பத்திக் கேக்கலை. போயிருக்க முடியுமான்னுதான் கேட் டேன்.''

''போயிருக்கலாம். நான் கவனிக் கலை. முக்கியமான லெட்டருங்களை டைப் அடிச்சிட்டிருந்தேன். யதிராஜன் கூட சாப்பிட வெளியே போனது கூட அவர் திரும்பி வந்து என் எதிரே நின்னு பேசினப் பதான் தெரிஞ்சது.''

''ஆக, மானேஜர் மட்டும்தான் உனக் குத் தெரிஞ்சு உள்ளே போனார்?''

''ஆமாம். அவர் உள்ளே போயிட்டு வந்த பின்னாடி, கொஞ்ச நேரம் கழிச்சு எம். டி. இன்டர்காம்ல பேசினார்.''

''என்ன சொன்னார்?''

''பதினைஞ்சு நிமிஷம் கழிச்சு லெட் டர்லைக் கையெழுத்துக்குக் கொண்டு வரச் சொன்னார். அது கொஞ்சம் வழக்கத்துக்கு மாறா இருந்தது.''

''எதனால அப்படிச் சொல்றே?''

''லெட்டர்களை டைப் பண்ணினதும் உடனே விரட்டி வாங்கிக் கையெழுத்துப் போடறது தான் அவர் வழக்கம். ரெண்டாவது, எப் போதும் இல்லாத ஒரு லேசான கரகரப்பு



கடவுளைப் பார்த்து மனிதன் கேட்டான் : 'நீங்கள் சர்வசக்தி படைத்தவராயிற்றே! பத்து இலட்ச ரூபாய் உங்களுக்குக் கிடைத்தால் அதை நீங்கள் எப்படி மதிப் பீர்கள்?

''அது எனக்கு ஒரு பைசா மாதிரி'' என்றார் கடவுள்.

''ஆயிரம் வருடங்கள் உங்களுக்கு எப்படி இருக் கும்?''

''ஒரு விநாடி மாதிரி.''

பேராசை கொண்ட மனிதன் கடவுளைப் பார்த்து, ''எனக்கு ஒரு பைசா கொடுங்கள் போதும்'' என்றான்.

கடவுள் சிரித்துக் கொண்டே, ''அவ்வளவுதானே. ஒரு விநாடி காத்திரு!'' எனச் சொல்லிவிட்டு மறைந்தார்.

ஆதாரம் : சிரிக்க.. ரசிக்க... சிந்திக்க.

தகவல் : எஸ். முகம்மது யூசுப்

அவன் பேசின தொனியில் தென்பட்டது.''

''அப்படியா?''

யோசித்தார் இன்ஸ்பெக்டர். பின் மானேஜரிடம் சொன்னார்.

''அடுத்தாப்ல யதிராஜன்கிட்டே பேசலாம்.''

**ய**திராஜன் மேஜையில்...

அவன் வாய் சூயிங்கம்மை அரைத்துக் கொண்டிருந்தது. எதிரே மேஜைக்கு அந்தப் பக்கம் நின்றிருந்த இன்ஸ்பெக்டர் கேட்டார்.

''யதிராஜன்! நீங்க ரொம்ப நல்லா மிமிக்ரி செய்வீங்களாமே?''

அலட்சியமாக அவருடைய கை பாக்கெட்டினுள் சென்று கைக்குட்டையை உருவ, வெளியே வந்த கைக்குட்டையுடன் கூடவே புறப்பட்ட சிகரெட் லைட்டர் டங்கென்று தரையில் விழ, அதை எடுக்கக் குனிந்தார் இன்ஸ்பெக்டர்.

மேஜைக்கடியில், அவருடைய பார்வையில் யதிராஜனின் ஷூ அணிந்த கால் குப்பைக் கூடையைப் பின்னோக்கி இழுக்க -

''ஃபூ''

துப்பாக்கி ரவையைப் போல சூயிங்கம் பறந்து வந்து கூடையினுள் விழ - அவனுடைய கால் கூடையை மீண்டும் அதன் பழைய இடத்துக்கே தள்ள -

நிமிர்ந்த இன்ஸ்பெக்டர் கண்களைச் சிமிட்டினார். சொன்னார்.

''குறி தப்பாம துப்புறீங்களே!''

சிரித்தான் யதிராஜன்.

''சமயங்களிலே தவறி வெளியே விழுந்துடறதும் உண்டு.''

''அப்படி விழுந்தா நடக்கும் போது உங்க ஷூவோட அடிப்பாகத்துல ஒட்டிக்கலாம் இல்லையா! அப்படித்தான் இன்னிக்கு நடந்திருக்கு. அது தெரியாம நீங்க எம். டி. ரூமுக்குப் போயி அவர் கழுத்தைக் கயிறு போட்டு இறுக்கி, கருணா வருவதைத் தாமதப்படுத்தணும்னு எம். டி. குரல்ல அவகிட்டப் பேசிட்டு, ஜன்னலைத் திறந்து வெளியே குதிக்க, கத்தி வாசல் வழியா, டீ குடிச்சுட்டு வர மாதிரி உள்ளே வந்திருக்கீங்க. ஜன்னல் வழியா குதிச்சப்ப பூத் தொட்டில கால் இறங்கி, அது சரிஞ்சு உடைஞ்சு, அதிலிருக்கிற கறுப்பு மண் உங்க ஷூ அடியில ஒட்டியிருந்த சூயிங்கம்ல ஒட்டிக்கிட்டு வந்து, இப்ப நான் கீழே குனிஞ்சப்ப உங்களைக் காட்டிக் கொடுத்துருச்சு. இப்போ சொல்லுங்க. எம். டி. யை எதுக்காகக் கொலை செஞ்சீங்க?''

யதிராஜனிடம் பதற்றம் தெரியத் தொடங்கியது.

## பொன்விழா ஆண்டு :: தங்க நகைப் பரிசுத் திட்டம் - 26

# பொன்னம்மா

பொன் விழா ஆண்டையொட்டி, பொன் நகை பரிசு பெற, ஆபரணப் பட்டியலுடன் ஆரம்பமான இந்தப் போட்டித் தொடரை, மறுபடி பொன் நகையில் கொண்டு வந்து முடிப்பதே பொருத்தம். எனவே உங்களை ஒரு கதாசிரியராக நினைத்துக் கொள்ளுங்கள். ''பொன்னம்மா'' என்று பெயர் கொண்ட உங்கள் கதாநாயகியை அவள் அணிந்துள்ள சில நகைகளோடு சேர்த்து ஒரு பாராவில் வர்ணிக்க வேண்டிய கட்டம். எப்படி எழுதுவீர்கள்? தபால் கார்டில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத அனுமதி. மறுபக்கம் உங்கள் விலாசம். மிகச் சிறந்த வர்ணனைக்கு பாலு ஜுவல்லர்ஸ் வழங்கும் ஒரு சவரன் பெறுமானமுள்ள பொன் நகை பரிசு. பிரசுரமாகும் இதர வர்ணனைகளுக்கு வழக்கமான சன்மானம். ''பொன்னம்மா'' என்று தலைப்புத் தரவும். ''கல்கி காரியாலயம், சென்னை - 600 032'' என்ற விலாசத்துக்கு மட்டுமே எழுதவும். முடிவு தேதி : ஜூலை 20



கல்கி




பாலு ஜுவல்லர்ஸ்



ஞானபீடப்
பரிசு : 1992

# கவிதையும் எழுதுவார்; கால்பந்தும் ஆடுவார்!

ராணுவ வீரராக விரும்பியவர், கவிஞ ராக ஆனாலும், தமது கவிதைகளில் ஒரு போர் வீரனின் துடிப்பை வெளியிட்ட புரட்சிக் கவிஞர் சுபாஷ் முகோபாத்யாய. இந்த வருடம் ஞானபீடப் பரிசு பெற்றவர்.

தாராசங்கர் பானர்ஜி, பிஷ்ணுடே, ஆஷாபூர்ணா தேவி ஆகியோரைத் தொடர்ந்து, நாலாவது முறையாக வங்காள இலக்கி யத்துக்கு இவர் மூலம் ஞானபீடப் பரிசு கிடைத்திருக்கிறது!

1940ல் இவரது முதல் கவிதைத் தொகுப்பு 'படாதிக்' வெளியான போதே, தம்மை ஒரு புரட்சிக் கவிஞனாக அடையாளம் காட்டிக் கொண்டவர் சுபாஷ். சுபாஷின் அப்பாவுக்கு இவர் கவிதைகள் எழுதுவது அறவே பிடிக்கவில்லை. ('படாதிக்' கவிதைத் தொகுதியைத் தகப்ப னாருக்குச் 'சமர்ப்பணம்' செய்தார் சுபாஷ்!) 'கபிதா' என்ற இலக்கிய இதழில், இந் நூலைப் பற்றி, புகழ்பெற்ற கவிஞர் புத்த தேவ் பாஸு ஓகோ என்று புகழ்ந்து விமர் சனம் எழுதினார். சுபாஷுக்கு அப்போது வயது 21தான்.

கல்லூரி முடித்தபின், கப்பல் சரக்கு இறக்கும் தொழிலாளர்களில் ஒருவராக உழைக்க ஆரம்பித்த சுபாஷ், ஓய்வு நேரங் களில் கால்பந்து விளையாட்டை ரசிப்பார். கவிதைகளும் எழுதுவார். ''கால்பந்து விளையாடியபடியே கவிதையும் புனைந் திருக்கிறேன்!'' என்று சுபாஷ் சொன்ன துண்டு.

சத்யஜித் ராயின் குழந்தைகள் பத்திரிகையான 'சந்தேஷ்' மறுபடி யும் 62-ல் தொடங்கப்பட்ட போது மூன்று வருடங்கள் சத்யஜித் ராயும் சுபாஷும் இணைந்தே ஆசிரியராக இருந்திருக்கிறார்கள்.

ஆப்பிரிக்க - ஆசிய எழுத் தாளர் சங்கத் துணைச் செயலராக இருந்த போது, பல அயல்நாடு களில் சுற்றுப் பயணம் செய்தார் சுபாஷ்! ஆனால் பிறகு இந்தச் சங்கமே சோவியத் வெளியுறவுத் துறையின் ஒரு பிரசார அங்கமாக, தங்களது கலாசார அமைப்புகளின் வழியே செயல்படத் தொடங்கிய வுடன், வெறுப்படைந்து வெளியே வந்துவிட்டார்.

'ஜாதோ தூரே ஜாய்' ('நான் போகிற தூரம் வரை') நூல் வெளி யான போது, கம்யூனிஸ்ட் கட்சி யுடனான இவரது உறவு அடி மட்டத்துக்கு வந்தது. (இந்த நூலுக் குத்தான் சாகித்ய அகாதமிப் பரிசு இவ ருக்குக் கிடைத்தது)

ஒருமுறை இவர் வெளிநாட்டு மகா நாடு ஒன்றுக்குத் தம்மால் கைப் பணத்தைச் செலவழித்துக் கொண்டு போக வசதி இல்லை என்று விட்டு விட்டார். சணல் ஆலைத் தொழிலாளி ஒருவர் இவரது அபி மானி. அவர் அப்போதுதான் ஓய்வு பெற்று, பிராவிடண்ட் பண்டுத் தொகை யைப் பெற்றிருந்தார். அதை அப்படியே எடுத்துக் கொண்டு சுபாஷிடம் வந்து, பயணச் செலவுக்கு வைத்துக் கொள்ளு மாறு வேண்டினார்!

தீவிர மார்க்ஸிய கம்யூனிஸ்ட்டாக இருந்து, கம்யூனிஸ்ட் கட்சி மாற்றங்களில் சிக்குண்ட சுபாஷ், இந்திரா காந்தி படு கொலைக்குப் பிறகு, இடதுசாரிக் கொள் கைகள் பக்கமே போகாமல் இருந்தார். காங்கிரசுக்காக முனிசிபல் தேர்தலில் வோட்டுக் கூடச் சேகரித்தார்!

இந்த 73 வயதிலும் பழைய துடிப் புடன் இருக்கிறார். அ வ ர து ஒட்டு மொத்தமான இலக்கியப் பணிக்கு இந்த ஆண்டு ஞானபீடப் பரிசு வழங்கப்பட் டுள்ளது.

– சித்தார்த்

# தொடரும் கோயில் கொள்ளைகள் பற்றி?

● மா. பாலசுப்பிரமணியன், சென்னை.

? தானியங்கி சிக்னல்கள் இருக்க, அருகே போலீஸ் காரர்களும் நிற்பது அவசியம் தானா?

! நீங்க ஒண்ணு... போலீஸ் காரர் பக்கத்தில் நிற்கும்போதே சிக்னல்களை மதிக்காமல் போற வாகன ஓட்டிகள் இருக்கும் போது வேற வழி? ரெண்டாவது, அடிக்கடி பவர் கட் ஆகும் போது கை கொடுப்பவர் (காட்டுபவர்) போலீஸ் காரர்தானே!

● பா. சிவகுமார், குஞ்சரம்.

? ஹெக்டேவைத் தொடர்ந்து சந்திர சேகர், வி. பி. சிங் ஆகியோரும் திரை உலகில் நுழைந்தால்...?

! யாரங்கே, மௌஷ்மியையோ ஜூலியையோ கூப்பிட்டு ரெண்டு பக்கத்துக்கு ஹியூமர் பண்ணச் சொல்லுங்க!

● தா. சிந்துகுமார், திருவட்டார்.

? தொடரும் கோயில் கொள்ளைகள் பற்றி...?

! கொள்ளையில் கோயில் கொள்ளை என்ன, வீடுகளில் கொள்ளை என்ன? எல்லாமே ஜாலியாகத் தொடர்வது ஆட்சிக்குத் தொடர்ந்து வழங்கப்பட்டு வரும் சான்றிதழ்கள்!

● கே. வி. வாசன், திருவண்ணாமலை.

? திண்டிவனத்தில் பேசிய மனோகரன், 'வருங்காலத்தில் சோவியத் ருஷ்யா போல் இந்தியாவும் பல துண்டுகளாகச் சிதறி விடும்' என்று எச்சரிக்கை விடுத்துள்ளாரே?

! இப்படி நடக்காமல் இருக்க என்ன செய்ய வேண்டும் என்றும் கூறியிருந்தால் மனோகரன்; இல்லையெனில் நோகரன்!

● தெ. க. திலீபன், வத்ராயிருப்பு.

? 'மாநாட்டில் என்னைக் கொலை செய்ய தி. மு. க. சதி செய்கிறது' என்று 'ஜெ' கூறியுள்ளாரே?

! வேடிக்கைதான்! மதுரையிலிருந்த பல உள்ளூர் தி. மு. க. பிரபலங்கள், உயிருக்குப் பயந்து வீட்டைப் பூட்டிக் கொண்டு வெளியேறி, வேறு ஊர்களில் தங்கித் திரும்பினார்கள் என்பதே உண்மை.

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? ஹெக்டே மாநில அளவில் புதிய கட்சி தொடங்கப் போவதாக அறிவித்திருப்பதற்கு என்ன காரணம்?

! ஜனதா தளமே பீகாரின் மாநிலக் கட்சி என்ற அளவில் நடப்பது காரணமாயிருக்கலாம்.

● எஸ். ராமசுப்பிரமணியன், தூத்துக்குடி.

? 'இந்த நூற்றாண்டுக்குள் எல்லோருக்கும் வீடு' என்கிறாரே மத்திய அமைச்சர் அருணாசலம்? சாத்தியமா?

! வீடு என்பதற்கு மோட்சம் என்ற அர்த்தமும் உண்டே!

● எஸ். அருளானந்தம், காரைக்கால்.

? முதலமைச்சர் கட்-அவுட், ஒரே மாதிரி வைக்காமல், அவர் நடித்த முன்னாள் சினிமா படங்களிலிருந்து வித்தியாசமான மேக்-அப்பில் விதம் விதமான தோற்றங்களை வைக்கலாமே?

! கவர்ச்சியாகத்தான் இருக்கும்; ஆனால் கௌரவமாக இராதே!

● கே. பி. சாரதி, வேலூர்.

? 'வசதி படைத்தவர்களுக்குத்தான் இப்போதுள்ள மதுக்கடைகள் பயன்படும். எனவே ஏழை எளிய மக்களுக்கு மது

☛ சாதனை...



☛ ...படைத்தார்கள்!



☛ கட்-அவுட் எங்கே?



☛ "தி. மு. க. சதி"



☛ தலைமை தேவை?



☛ ருஷ்யா போல்...



# நீங்கள் கேட்டவை - தராசு

◆ சினிமாவில்...



◆ ...நுழைந்தால்?



விலக்கு கொண்டு வரப்பட்டுள்ளது என்று நான் எடுத்துக் கொள்ள வேண்டும்' என்கிறாரே ஆளும் கட்சி எம். எல். ஏ. ஜெயகுமார்?

! 'ஜெ'க்குப் பயந்து ஜெயகுமார் இப்படி திரும்பத் திரும்பக் கூறித் தம்மைத் தாமே ஒருவேளை ஏமாற்றிக் கொள்ளலாம்; ஆனால் ஊரை ஏமாற்ற முடியாது.

● அ. உஸ்மான் அலி, வந்தவாசி.

? *காங்கிரஸின் பொருளாதாரக் கொள்கையை எதிர்த்து பந்த் நடத்திய மா. கம்யூனிஸ்ட், இப்போது காங்கிரஸ் வேட்பாளருக்கு ஆதரவு தருவது பற்றி...?*

! சரியான அணுகுமுறை. பொருளாதாரக் கொள்கையில் கருத்து மாறுபட்டால், ஜனாதிபதி தேர்வு விஷயத்தில் ஒத்துப் போகக் கூடாதா என்ன? இதைத்தான் issue based politics என்பது. சகட்டுமேனிக்கு எதிர்ப்பு அல்லது ஆதரவு என்று இன்றி, ஒவ்வொரு பிரச்னையையும் தனித்தனியே அணுகி அதற்கு ஏற்ப எதிர்ப்பு அல்லது ஆதரவைத் தீர்மானிப்பது.

● கே. சத்தியநாராயணன், வேலூர்.

? *கபில்தேவ் கால்பந்து விளையாடுவது இடதுசாரிகள் செய்யும் சதி' என்கிறாரே கிரிக்கெட் கண்ட்ரோல் போர்டு தலைவர் மாதவராவ் சிந்தியா?*

! 'கபிலுக்குப் பதினெட்டு வயதுக்கு மேல் ஆகி விட்டது. சுதந்திரமாகச் சிந்திக்கும், செயல்படும் உரிமை இருக்கிறது' என்கிறார் காவஸ்கர். இதில் சதி எங்கே வந்தது?

● எம். இராஜேந்திரன், லால்குடி.

? *டயானா ஐந்து முறை தற்கொலை செய்து கொள்ள முயற்சி செய்தாராமே?*

! இத்தகைய அவதூறான செய்திகளை ஆதாரமின்றி வெளியிட்டதற்காகப் பிரிட்டிஷ் நாளிதழ்கள், சஞ்சிகைகளை அந்நாட்டுப் ''பத்திரிகைகள் புகார் கமிஷன்'' வன்மையாகக் கண்டித்திருக்கிறது.

● எஸ். பாலாஜி, சென்னை - 1.

? *கருணாநிதியின் தலைமை இன்று தி. மு. க. வுக்கு மட்டுமல்ல; தமிழ்நாட்டுக்கே தேவை' எனக் கல்கி எழுதியிருப்பது பற்றி... விளக்கம் தருவீர்களா?*

! விளக்கம் தலையங்கத்திலேயே இருக்கிறது. ஆனாலும் மறுபடி சொல்கிறேன். ஜனநாயகத்தில் நல்லாட்சி தேவை. நல்லாட்சி அமைய பலமான எதிர்க்கட்சி தேவை. எதிர்க்கட்சி சிறப்பாகச் செயல்பட சிறந்த தலைமை தேவை. எனவே மு. க. வின் தலைமை முக்கியமானதாகிறது. ஆனால் ஆளும் கட்சி, எதிர்க்கட்சி ஆகிய இரண்டுமே நமது எதிர்பார்ப்புக்கு உயராமல் ஏமாற்றம் தருகின்றன என்பதே விசனிக்கத் தக்க உண்மை.

● என். ரஜினிதேவராஜ், ஈரோடு. ❑

? *'எம். ஜி. ஆர். கட்-அவுட் எங்கே?' என்று கேட்ட தொண்டருக்கு அடி உதையாமே?*

! பின்னே? எம். ஜி. ஆர். கட்-அவுட் வேறு ஜிம்பூம்பா அளவில் எழுந்து, பின்னர் சரிந்து விழுந்து உயிர் குடித்து, எம். ஜி. ஆருக்குக் கெட்ட பெயர் தேடித் தர வேண்டுமாக்கும்! போடு இன்னும் ஒன்று! மொத்து!

● ஸ்ரீராஜ், பம்பாய்.

? *கோபத்தை அடக்க ஒரு வழி சொல்லுங்களேன்?*

! கொஞ்சம் இருங்க; கோவைத் தம்பியையும் சைதை துரைசாமியையும் கேட்டுக்கிட்டு வரேன். அவங்கதான் தங்கள் கோபத்தையும் அடக்கிக்கிட்டு, அம்மா கோவத்தையும் எப்படியோ அடக்கி, மிகக் குறுகிய காலத்துக்குள் கட்சியிலே மறுபடி சேர்ந்து சாதனை படைச்சிருக்காங்க.

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
என். ரஜினி தேவராஜ்,
157, கே. ஏ. எஸ். நகர்,
ஈரோடு - 638 003.

◆ [illegible]



◆ [illegible]



◆ [illegible]



◆ தற்கொலை முயற்சி?



# குழந்தைகளிடமிருந்து கற்ற கல்விமுறை!

ரோம் நகரத்தின் ஏழைகள் வேலைக்குப் போகும் போது தங்கள் குழந்தைகளை அந்தக் காப்பகத்தில் விட்டுச் சென்றனர். சேரி வாழ் தினக்கூலி ஊழியர்களின் குழந்தைகள். இச் சிறுவர் சிறுமியர்தான் உலகின் மிக நவீன, கருத்தாழம் மிக்க கல்வி முறை உருவாக வழிகாட்டினார்கள்! எப்படி?



மரியா மாண்டிஸரி

இந்தக் குழந்தைகள் இல்லம், இன்று நாம் சிறந்த கல்வியாளராக மதித்துப் போற்றும் டாக்டர் மரியா மாண்டிஸரியின் மேற்பார்வையில் நடந்து வந்தது.

காப்பகத்துக் குழந்தைகளுக்குச் சில விளையாட்டுப் பொருள்களை அவர் கொடுத்தார். அவர்கள் அவற்றுள் பொம்மைகளைத் தேர்ந்தெடுக்காமல், மூளைக்கு வேலை தரும் சற்றே சிக்கலான - புதிர் அமைப்பிலான விளையாட்டுச் சாமான்களையே தேர்ந்தெடுத்து விளையாடினார்கள் என்பதைக் கவனித்தார் டாக்டர் மாண்டிஸரி.

மூன்று வயதான ஒரு பெண் குழந்தை, வெவ்வேறு அளவிலான உருளைகளை அவற்றுக்கு உரிய இடத்தில் பொருத்தும் பயிற்சியைத் தொடர்ந்து செய்து கொண்டேயிருப்பதைக் கண்ட அவர், அக் குழந்தையின் கவனத்தைத் திசை திருப்பப் பல முறை முயன்றார். அப்படியும் உருளைகளைப் பொருத்தி வந்த குழந்தையின் கவனம் கலையவில்லை! எல்லா உருளைகளையும் நீக்கி விட்டு மீண்டும் அவற்றுக்குரிய இடத்தில் பொருத்தும் விளையாட்டில் அச் சிறுமி நாற்பத்திரண்டு முறை ஈடுபட்ட பிறகுதான் கவனம் கலைந்து வெளிப்பட்டாள்.

'குழந்தைகளால் தொடர்ந்து ஒரு விஷயத்தில் கவனம் செலுத்த முடியாது; ஓர் இடத்தில் அமைதியாக இருக்க முடியாது;' போன்ற வலுவான தீர்மானங்களைத் தவிடு பொடியாக்கியது மரியா மாண்டிஸரியின் இந்த அனுபவம். குழந்தைகளை மேலும் மேலும் கூர்ந்து கவனித்ததில், அவர்கள் தங்கள் இயல்பில் விடப் பட்டால் முழுமையாக வளர்ச்சியடைகிறார்கள் என்று உணர்ந்தார். ஒரு சாதகமான சூழலை உருவாக்கித் தர வேண்டியது மட்டுமே பெரியோர்களின் பணி. அதன் பிறகு, சற்று விலகி நின்று உதவினால் போதும், குழந்தைகள் தாமாகவே புதிய புதிய விஷயங்களைக் கற்றுக் கொள்வார்கள். அவரவர் இயல்புக்கு ஏற்ப, ஒரு விஷயத்தைத் தெரிந்து கொள்ளத் தேவையான நேரத்தை எடுத்துக் கொண்டு, அதன் பிறகே மற்றொரு விஷயத்துக்குத்



உலகை மறந்து 'உலகப் படம்' (புதிர்) அமைப்பதில் ஈடுபடும் குழந்தை...

திசை திரும்புவார்கள். இந்த முறையில் குழந்தை தானே பயிலும் போது, போட்டி பொறாமைக்கு இடமில்லை. ஒப்பிட்டு நோக்கி மதிப்பீடு செய்தலுக்கே அவசியமில்லை. குழந்தை தன் முயற்சியைத் தானே மெருகேற்ற ஒவ்வொரு முறையும் முனைகிறது. ஆரோக்கியமான மன வளர்ச்சியும் அடைகிறது. இந்த முடிவுக்கு வந்தார் டாக்டர் மரியா மாண்டிஸரி.

பரீட்சை பயத்துக்கும் தோல்வியால் விளையும் அவமானத்துக்கும் இடமளிக்காத ஒரு புதிய கல்வி முறை மெள்ள மெள்ள மலர்ந்தது. டாக்டர் மாண்டிஸரியின் நினைவால் அவர் பெயரைத் தாங்கும் இக் கல்வி முறைக்கு அதில் நம்பிக்கையுடைய, பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் - வழிகாட்டிகள் என்றே சொல்ல வேண்டும் - மட்டும் இருந்தால் போதாது. குழந்தைகளின் மனத்தைக் கவர்ந்து சிந்தனையைத் தூண்டும் உபகரணங்களும் மிக மிக அவசியம்.



● துணி துவைக்கக் கற்றுக் கொள்கின்றனர்...

இத்தகைய விசேஷ உபகரணங்களின் கண்காட்சி ஒன்றைச் சென்னை அடையாறிலுள்ள கப்ராஜா மாண்டிஸரி பள்ளியில் சமீபத்தில் நடத்தினார்கள்.

கோத்து மகிழ வண்ண வண்ண மணிகள், உலகப் பட வடிவில், 'ஜிக் ஸா' போன்ற எளிய புதிர்ப் பலகை; மரியா மாண்டிஸரியின் சிந்தனையைத் தூண்டிய சிறுமி உபயோகித்ததைப் போன்ற உருளைகள்; கண்ணைக் கவரும் படங்களுடன் கூடிய குழந்தைகளுக்கான புத்தகங்கள்; கணக்கையும் விஞ்ஞானத்தையும் நோட்டுப் புத்தகமும் கரும்பலகையும் உபயோகிக்காமலேயே கற்றுக் கொள்ள உதவும் வகை வகையான விளையாட்டு உபகரணங்கள்...

இவை யாவுமே குழந்தைகளை மனத்தில் கொண்டு வண்ணமயமாகவும், கையாள்வதற்குச் சுலபமாகவும் தயாரிக்கப்பட்டுள்ளன.

அன்றாட வாழ்க்கைக்குத் தேவையானவற்றைச் சிறுவர் சிறுமியர் தாமே கற்றுக் கொள்ள உதவும் உபகரணங்களையும் வைத்திருந்தனர். தலை பின்னக் கற்றுக் கொள்வதற்கு முன்னோடியாக - கனமான, வண்ணப் பட்டு நூல் திரிகள் இருந்தன. துணி துவைக்கக் கற்றுக் கொள்ள ஏதுவாக சின்ன பக்கெட், குவளை, பிரஷ், அவர்களுக்கு எட்டும் உயரத்தில் கிளிப்புடன் துணி உலர்த்தக் கொடி...! தண்ணீரையும் தானியங்களையும் ஒரு பாத்திரத்திலிருந்து இன்னொன்றில் ஊற்றியும் மாற்றியும் பழக வசதியாகச் சின்னச் சின்னப் பாத்திரங்கள். இவை யாவும் வீட்டில் உபயோகிப்பதைப் போன்ற வடிவமைப்பிலேயே கண்ணும் கருத்துமாகத் தேர்ந்தெடுத்து வைக்கப்பட்டிருந்தன...

சுருக்கமாகச் சொல்வதென்றால், நாம் பொதுவாகக் குழந்தைகள் எந்தெந்தக் காரியங்களைச் செய்தால் தொந்தரவாகக் கருதி, ''எடுக்காதே, தொடாதே'' என்று கண்டிப்போமோ அவற்றையெல்லாம் அவர்களே விரும்பிச் செய்ய ஊக்குவித்து வழிகாட்டும் வகையில் எண்ணற்ற பொருள்களைச் சேகரித்துத் தயாரிக்கப்பட்டிருந்தது அக் கண்காட்சி.

அந்த உபகரணங்களையும் பொருள்களையும் குழந்தைகள் பயன்படுத்தி மகிழ்வதைக் கற்பனை செய்து பார்க்கவே நமக்கு உற்சாகமாய் இருந்தது எனில், மெய்யாகவே அவற்றை உபயோகிக்கும் போது குழந்தைகள் எத்தனை மகிழ்ச்சி அடைவார்கள்!

– சீதா ரவி



# அண்ணாமலை

வெளுத்ததெல்லாம் பால் என்று நினைக்கிற பால்கார அண்ணாமலைதான் ஹீரோ. அந்த வெகுளித்தன பாலுடன், கொஞ்சம் நகைச்சுவைச் சர்க்கரை, தகுந்த அளவில் வீரத் தேநீர், வாசனையாய் சென்டிமெண்ட் ஏலக்காய், காதல் ரோஜாத்தூள் என மசாலா டீ போட்டிருக்கிறார்கள்.

தாயற்ற பணக்கார சரத்பாபுவையும் தன் மகன் அண்ணாமலையுடன் மற்றொரு மகனாக அன்பு காட்டுகிறார் மனோரமா. வளர்கிறார்கள். அன்பு தொடர்கிறார்கள். பிரிக்க முற்படுகிறது ராதாரவி அணி. தகுந்த சமயத்தில் தந்திரமாக வெற்றியும் பெறுகிறது. ரஜினி தங்கள் நிலத்தை, தந்தை நினைவு வீட்டை இழப்பதுடன் மோசமாக அவமானப்படுத்தப்பட, சவால். முயற்சி. வெற்றிகள். எதிர் அணியின் தோல்வி எனக் கடைசியில் 'இன்னா செய்தாரை' - குறள்படி முடிவு. நண்பர்கள் ஒன்று சேர்தல் என இவைகளுக்கு நடுவே முதல் பாரா.

பார்லிலோனாவுக்கு இந்திய அணியில் சேர்க்க வேண்டிய மற்றொரு நபர் ரஜினி காந்த். குஷ்புவைக் காப்பாற்றும் சண்டையில் அவர் புதிய ஸ்டைல், கிளுகிளுப்புடன்... மைகாட்! எத்தனை அநாயாசமாய் பளு தூக்குகிறார்!

சரத்பாபுவின் ஜோடியாக அவ்வப்போது வரும், ரேகா? யுரேகா : சீக்கிரமே தமிழ்த் திரையுலகுக்கு ஓர் இளமையான அம்மா பாத்திரத்திற்கான முயற்சியைத் துவக்கியிருக்கிறார்.

இசை?

மோதிரப் பரிசு தேவா. ஒன்றிலிருந்து எடுத்துக் கையாண்டால் திருட்டு, பலவற்றைச் சேகரம் செய்து தந்தால் திரட்டு என்பது... மன்னியுங்கள் சுவாமி! என் கருத்தல்ல; பிரபலமான துணுக்கு!

ஜனகராஜின் அரைகுறை ஆங்கிலமும் அதற்கு அவர் பெறும் பதிலடியும் நம் உதடுகளைப் புன்னகை நிலங்களாக்குகின்றன என்றால் ரஜினியின் 'பா, பா, பாம்பு' நம்மிடம் டூத்பேஸ்ட் விளம்பரம் வரவழைத்து விடுகிறது. அது சரிக்க, குஷ்புவின் பாத்ரூம் தரிசனத்தை ஆசாமி இப்படியா ஊர் முழுக்கத் தமுக்கடிப்பார்!

டைரக்டர் சுரேஷ் கிருஷ்ணா : அம்மி கொத்தப் பயன்படுத்தப்பட்டிருக்கும் சிற்பி. காரணம்? அம்மி அரண்மனை அம்மி என்பதால்!

படம் நெடுக அரசியல் வசனங்கள். ரஜினி ரசிகர்கள் கைதட்டுவதற்காகவா? இல்லை நிஜமாகவே இவரின் வேறொரு துறைக்கான திருப்புமுனையா?

ரயில் தொடர் பார்க்க அலுக்காதது தான். அதற்காகக் காஷ்மீர் முதல் குமரி வரை இத்தனை நீளக் கதைத் தொடரா விடுவது?

- சுந்தர்ஜி

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் : ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

# பள்ளிக்கூடம் திறந்துவிட்டது...

பள்ளிக்கு குடிநீரை
சுகாதாரமாகக் கொண்டு செல்ல
உடனே வாங்கிடுவீர்
ஸ்ரீபெட் ஸ்கூல் வாட்டர்
பாட்டில்கள். கண்ணைக்கவரும்
வண்ணங்களில்,
நெஞ்சையள்ளும்
வடிவங்களில் எங்கும்
கிடைக்கின்றன !



## இலவசம்!

ஒவ்வொரு ஸ்ரீபெட்
ஸ்கூல் வாட்டர்
பாட்டிலுடன்
ரப்பருடன் கூடிய
பென்சில் !

முந்துங்கள் !
இச்சலுகை 31.7.92 வரை
மட்டுமே.

## ஸ்ரீபெட்

பாட்டில்கள் • ஜாடிகள்

சுகாதாரமானது.

உடையாதது.

உணவுத்தரம் கொண்டது.




**ஸ்ரீபெட்**
ஸ்ரீராம் நிறுவனத்தின்
தரமான தயாரிப்பு

விநியோகஸ்தர்கள்: ஸ்ரீராம் சேல்ஸ் இன்டர்நேஷனல்

AAA/SS/9249

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka

ஜலதோஷம் உங்கள் செல்ல மகளை படாதபாடு படுத்தும்போது
படிப்பு, விளையாட்டு எதிலுமே அவள் மனம் லயிக்காது.

# ஜலதோஷத்தைப் போக்குங்கள் ஜண்டு பாம் தடவுங்கள்.

விரைவில் துடிப்புடன் விளங்குங்கள்.



ஜலதோஷம் தனியாக வருவதில்லை. கூடவே வேறு சில உபாதைகளையும் அழைத்து வரும் – மூக்கடைப்பு,சுவாசிப்பதில் சிரமம், போன்றவை. இதில் கவலைப்பட ஏதுமில்லை.

வலியை நீக்கும் ஜண்டு பாமிலே ஆழமாக ஊடுருவி செயல்புரியும் விசேஷ மருந்துப் பொருட்கள் உள்ளன. இவை ஜலதோஷம் மற்றும் இதர உபாதைகளையும் இழுத்து வெளியேற்றி, உங்களுக்கு உடனடி நிவாரணம் அளிக்கின்றன.

வலியை நீக்கும் ஜண்டு பாமை எப்போதும் கைவசம் வைத்திருங்கள்.
இது தலைவலி மற்றும் உடம்புவலி போன்ற உபாதைகளிலிருந்தும்
விரைவில் நிவாரணமளிக்கிறது.

ஜண்டு பாம் ஜண்டு பாம் வலியை நீக்கும் பாம
ஜலதோஷம் தலைவலி நோவுகளையும்
நொடியில் நீக்கிடுமே

30, 10 மற்றும் 5 கிராம் பேக்கிலே




பாம் ஒன்று
செயல்
மூன்று

1. ஜலதோஷம்
2. தலைவலி
3. உடம்பு வலி

AD PALACE/ZPW/142-92/TAM